# மங்கையிடம் கொஞ்சும் மலேயங்கள் ஆயிரம்

மாறும் லயங்களின் மென்மை அனைத்தும் தெளிந்து, பெண்மை கொஞ்சும் ஆடைகள் அநேகம் அவளைத் தழுவிடப் படைக்கிறது **ஜாஸ்மின்**; நகம் முதல் சிகை வரை அவளைத் தனித்திடும் பெண்மை பளிச்சிடச் செய்கிறது.

அணிவீர் **ஜாஸ்மினின்** அருமை லேஸ்கள்; பூப் பின்னல் துணிவகைகள்; வண்ண ப்ரின்ட்களில் ஜெர்ஸி, டஃபேட்டா, க்ரேப், ப்ரொகேட் என்றிவைகள். வீட்டுக்கு அழகு கூட்டிடச் செய்யும் அலங்காரத் துணி வகையுடன், **ஜாஸ்மினின்** உள்ளங்கவர் லேஸ் திரைச் சீலைகள்.

**Jasmine®**

**லேஸ்**

பெண்மை அணியும் பெண்மை



Professional Motivators/Jasmine '21



ஜாஸ்மின் மில்ஸ் ப்ரை. லிட்., கிருஷ்ண நிவாஸ், கல்பதேவி ரோட், பம்பாய்-400 002.
மொத்த வியாபாரிகள்: ஷேத் ப்ரதர்ஸ், 377 கல்பதேவி ரோட், பம்பாய்-400 002.
தொலைபேசி: 314803/312056 சாந்திலால் அண்டு கோ., கோவிந்த் கலி, தொலைபேசி: 318530.
எம்.எம்.ஜே. அண்டு கோ சம்பா கலி, தொலைபேசி: 319643. ஜாக்வி ஷா அண்டு கோ.
கடியால் கலி, எம்.ஜே. மார்க்கெட், பம்பாய்-400 002, தொலைபேசி: 314646, லக்ஷ்மண் ப்ரதர்ஸ்,
480, கல்பதேவி ரோட், பம்பாய்-400 002, தொலைபேசி: 313332.

# போடு புதிர்!

கல்கி
நவம்பர் 7, 1976
அநல
ஐப்பசி 22

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பஞ்சு வியாபாரிகள் நால்வர் எலியின் உபத்திரவம் தாங்காமல் பூனை வளர்த்தார்கள். அந்த அதிர்ஷ்டப் பூனை வந்த நேரம், இலாபம் மிகக் கிடைத்தது. ஆதலால் வியாபாரிகளும் பூனையின் நான்கு கால்களிலும் அணிகலன்கள் செய்து பூட்டினர். ஒவ்வொரு வியாபாரியும், ஒவ்வொரு காலுக்கு அணிகலன் அணிவித்தார்.

முன் இடது காலில் புண் உண்டாகி விட்டதால் அந்தக் காலுக்குரிய வியாபாரி அந்தக் காலிலுள்ள அணிகலனைக் கழற்றிவிட்டு, ஒரு துணியை மண்ணெண்ணெய்யில் நனைத்து, அந்தக் காலில் புண்ணைச் சுற்றிக் கட்டினார். அந்த ஒரு காலைத் தரையில் ஊன்ற முடியவில்லை.

அடுப்புப் பக்கத்தில் பூனை படுத்திருக்கும் பொழுது, முன் இடது கால் துணியில் தீப்பற்றிக் கொண்டது. உடனே பூனை பஞ்சுப் பொதிகளின் மேலாக ஏறி ஓடியதால் பஞ்சுப் பொதிகள் யாவும் தீப்பற்றி எரிந்து சாம்பலாகி விட்டது. வியாபாரிகள் பெரும் நஷ்டத்துக்கு உள்ளானார்கள்.

முன் இடது காலுக்குரிய வியாபாரியிடம் நஷ்டஈடு கேட்டு, மற்ற மூன்று வியாபாரிகளும் வாதாடினர். வழக்கு நீதிமன்றம் போயிற்று. நீதிபதி என்ன தீர்ப்பு கூறியிருப்பார்? யூகியுங்கள்!

— வே. ஆ. கோபால் ராசு

விடை: "ஒரு கால் புண்ணாகி, நடக்க முடியாமல் போனபின், மற்ற மூன்று கால்களால்தானே அந்தப் பூனை பஞ்சுப் பொதிகளின் மேலேறி ஓடிற்று? ஆகவே, மூன்று பேர்களும் சேர்ந்து, முன் இடது காலுக்குரியவருக்கு நஷ்டஈடு கொடுங்கள்!" என்று நீதிபதி தீர்ப்பு வழங்கினர்.

கண்ணாடியின்றி நல்ல பார்வை பெறலாம்!

உங்களுக்கு இதைவிட மட்டற்ற மகிழ்ச்சி தரக்கூடிய ஒரு செய்தியும் வேறு உண்டோ!
'காண்டாக்ட் லென்ஸ்'களை உபயோகியுங்கள்.

இந்த 'காண்டாக்ட் லென்ஸ்'கள் கிட்டப்பார்வை, தூரப்பார்வை மற்றும் அட்டாகிக் (காடராக்ட் ஆபரேஷனுக்குப்பின்) கெரடோ கோனஸ், அனிஸோமெட்ரோபியா, அனிரிடியா, பாலிகோபியா, போன்ற பார்வை குறைபாடு உடையவர்களுக்கு மிகவும் சிறந்தது.

'காண்டாக்ட் லென்ஸ்'களை வெகுசுலபமாக நீங்களே உங்கள் கருவிழிகளில் பொருத்திக்கொள்ளலாம்... கழற்றியும் விடலாம்—சில நாட்கள் பழகிய பின்! உங்கள் விழிகளில் பொருத்தப்பட்ட இச்சிறு 'காண்டாக்ட் லென்ஸ்'கள் மற்றவர்கண்களுக்குத் தெரியாது. ஆகவே உங்கள் எழில் மிகு முகத் தோற்றத்தில் எவ்வித மாறுதலும் இல்லை!

உங்கள் கண் வைத்தியரை ஆலோசனைக்கு அணுகுங்கள்

மற்ற விவரங்களுக்கு
ஆசியா காண்டாக்ட் லென்ஸ் லாபரெட்டரி
4/1, ஆண்டர்சன் ரோடு,
சென்னை-600 006. போன்: 87865



# நகர் வலம்

# ஷோலாப்பூர்



சில சில சொற்களிடம் எப்படியோ நமக்கு ஓர் இனம் தெரியாத பற்றும் மயக்கமும் ஏற்படுவதுண்டு. அவ்வகையில் ''ஷோலாப்பூர்' என்ற சொல்லில் தனியான ஈடுபாடு சிறு வயது முதலே எனக்கு இருந்ததுண்டு. அந்த 'ஷ'கர எழுத்து விளைவித்த மயக்கமோ என்னவோ தெரியவில்லை — ஷோலாப்பூரைப் பற்றிப் பிரமாதமாகக் கற்பனை செய்து கொள்வேன். எனவே, மகாராஷ்டிர மாநிலத்தில் ஒரு சில நகரங்களை ''நகர்வலம்'' புரிந்து விட்டு வரவேண்டும் என்று தீர்மானித்த போது, முதலில் ஷோலாப்பூர்தான் என்னை ஈர்த்தது. சென்னையிலிருந்து பம்பாய் நோக்கிப் புறப்பட்டால், மகாராஷ்டிர மாநிலத்தில் ரயில் நுழைந்ததும் முதலில் நிற்பது ஷோலாப்பூரில்தான் !

நான் ஷோலாப்பூரைப் பத்து மணிக்கு அடைய வேண்டும் என்றால் காலை எட்டு மணிக்கே ஒரு சுபச் செய்தி என்னை வரவேற்றது. ஷோலாப்பூர் நகரசபை தன் அபிவிருத்தித் திட்டங்களுக்காகப் பொதுமக்களிடம் 65 லட்சம் கடன் கோரியிருந்தது. அதற்கு 2.38 கோடி — அதாவது கேட்டதைவிடப் பல மடங்கு அதிகமாக மக்கள் வழங்கியிருக்கிறார்கள். நகரசபைகளின் வரலாற்றில் என்றும் கேட்டறியாத அதிசயம் என்று 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகை தலைப்பிட்டிருந்தது.

இந்த மகிழ்ச்சிகரமான செய்தியை அடுத்து ஓர் ஏமாற்றம். ஷோலாப்பூர் ஸ்டேஷனில் இறங்கினால் ஷோலாப்பூர் ஸ்டேஷனைக் காணவில்லை. ஸோலாப்பூர்தான் இருந்தது ! கையில் வைத்திருந்த டிக்கெட்டைப் பார்த்தேன். 'Sholapur' என்றுதான் இருந்தது. ஆனால் இதுகாறும் மாய மந்திர ஜாலம் புரிந்து வந்த 'ஷ'கரம் போய் வெறும் ஸோலாப்பூர் 'Solapur' என்று ஸ்டேஷன்







பெயர் பலகையில் எழுதியிருந்தது. ஸோலாப்பூர் கார்ப்பொரேஷன் கமிஷனரை 2.38 கோடி திரட்டியதற்குப் பாராட்டிவிட்டு, ஸோலாப்பூர் என்று மாற்றிவிட்டதற்குச் சண்டை போட்டுவிட்டு வரவேண்டும் என்று தீர்மானித்து, என் சாமான்களை ஸ்டேஷன் ரிடையரிங் ரூமில் போட்டுவிட்டு, ஸ்நானம் செய்துவிட்டுப் புறப்பட்டேன் !

நகர மன்றத்தை அடைந்தால் என் மூச்சுத் திணறிவிட்டது. என்ன அழகான கட்டடம் ! என்ன கம்பீரமான தோற்றம். சென்னையில் எழும்பூரில் உள்ள 'ஆர்ட் காலரி' கட்டடத்தை நினைவூட்டும் வகையில் இருந்தது. சென்னையில் உள்ளது சிவப்பு; இது நல்ல பால் வெண்ணிறு! இந்தக் கட்டடத்தின் அழகில் மயங்கிய நிலையில் நகரமன்ற கட்  ரைப் பார்க்கச் சென்றால் என்ன ஆச்சரிய  . அவர் நம் ஊர்க்காரர். வேலூர் ! திரு ப. எஸ். சுந்தரம் ஐ. ஏ. எஸ். நகர பரிபாலன சபையின் நிர்வாக அதிகாரியாக இருக்கிறார் ! இப்படி எதிர்பாராதவிதமாக நம் ஊர்க்காரரைப் பார்க்க நேர்ந்த மகிழ்ச்சியில் நான் சண்டை போட வந்த விஷயம் மறந்து போய் விட்டது !

ஆசிய கண்டத்திலே முதல் முதல் மிகப் பெரிய நூல் — நெசவு ஆலை தோன்றியது ஷோலாப்பூரில்தான் ! 1877ம் ஆண்டில் ''ஷோலாப்பூர் ஸ்பின்னிங் அண்டு வீவிங்' மில்ஸ்'' என்று மிகப் பெரிய ஆலை தொடங்கி நடத்தப்பட்டு வந்தது. 1891ம் ஆண்டில் அதில் தீப்பற்றிப் பெரிய கண்டம் நேர்ந்தது. அதிலிருந்து தப்பி இரண்டாண்டுக்குப் பிறகு 1893லிருந்து சிறப்பாக நடைபெற்று வந்தது. இரண்டாவது உலக மகாயுத்தத்தின்போது கோடிக் கணக்கில் லாபம் சம்பாதித்தது. பிறகு அதன் நிர்வாகம் சீர்குலைந்தது. 1960ல் மூடப்பட்டது. இந்த மில் மட்டும் 25,000 தொழிலாளர்களுக்கு வேலை தந்து வந்தது. அப்படிப்பட்ட மில் மூடப்பட்டால் எத்தனை குடும்பங்களுக்கு எவ்வளவு துயரம் ஏற்பட்டிருக்க வேண்டும் ! இந்த ஆலை மூடி இன்றைக்குப் பதினைந்து ஆண்டுகளுக்கு மேல் ஆகிறது. ஆனால் அது விளைவித்த துயரம் இன்னும் மக்கள் மனத்தைவிட்டு நீங்கவில்லை. இங்கு யாருடன் ஐந்து நிமிஷங்கள் பேசினாலும் இந்தத் துயரச் சம்பவத்தைக் குறிப்பிடாமல் இருக்க மாட்டார்கள்,

எனினும் இன்று இங்கு வேறு மூன்று மில்கள் இயங்குகின்றன. இம்மூன்று மில்களிலும் சுமார், 10,000 பேர் வேலை செய்வார்கள். மூன்று ஆலைகளுமே மிகப் பழைய ஆலைகள். இதில் நரசிங் கிரிஜி மில்ஸ், மகாராஷ்டிர அரசின்

# எஸ்.வீ.எஸ்



முதல் பக்கம்:

- பண்டரீபுரம் கோயில்.
- ஷோலாப்பூர் நகரசபைக் கட்டடம்.
- ஷோலாப்பூரில் 'காட்டி' திருவிழா.

இந்தப் பக்கம்:

- சித்தேஸ்வர் கோயில்.
- ஷோலாப்பூர் கோட்டை.
- நர்சிங்கிரிஜி மில்.
- மகாராஷ்டிரத்து லாமணி நடனம்.



டெக்ஸ்டைல் கார்ப்பரேஷனின் அங்கமாக அதாவது சர்க்கார் உடைமையாக இன்று லாபகரமாக இயங்குகிறது.

வருஷத்துக்கு ஏழு கோடி ரூபாய் பெறுமானமுள்ள வியாபாரம் நடக்கிறது. இந்த ஆலையின் பிரதம நிர்வாகி இரு நாகபூஷணம் என்ற தமிழர். மிக உற்சாகமான இளைஞர். செயலாற்றல் மிக்கவர். ஆலைத் தொழிலாளர்களும் அவரிடம் எவ்வளவு அன்புடன் நடந்து கொள்ளுகிறார் என்பதைக் கண்ணால் கண்ட போது, பெருமையாகத்தான் இருந்தது! பம்பாயும், அகமதாபாதும் நூற்பு–நெசவு ஆலைத் தொழிலில் ஈடுபடுவதற்குச் சற்று முன்பேகூட ஷோலாப்பூர் நெசவாலைத் தொழிலில் ஈடுபட்டு உலகப் புகழ்பெற்றுவிட்டது. நெசவுத் தொழிலில் நீண்ட பல ஆண்டுகளாக ஈடுபட்டதாலேயே, 'ஷோலாப்பூர்' பெயர் தேசம் முழுதும் சென்ற ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாகப் பரவியுள்ளது !

ஷோலாப்பூரில் மிக முக்கியமான தொழில் கைத்தறி நெசவுத் தொழில். ஷோலாப்பூர் போர்வைகள், புடவைகள் மிகவும் பிரசித்தம். ஷோலாப்பூர் போர்வைகள் கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. கைத்தறிகளைவிட 'பவர்லூம்'கள் இப்பொழுது அதிகமாகியுள்ளன. இந்தக் கைத்தறி, பவர்லூம் எனப்படும் விசைத்தறிகளில் ஈடுபட்டுள்ளவர்கள் அனைவரும், ''பத்மசாலியர்'' என்னும் தெலுங்கர்கள். இவர்கள் தெலுங்கானா பகுதியிலிருந்து குடியேறியவர்கள். இன்றல்ல நேற்றல்ல — நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பே.

ஆம், ஷோலாப்பூர் மகாராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்த நகரமாயினும் இங்கு மராட்டியர் சிறுபான்மையர். கன்னடியரும், தெலுங்கரும் சேர்ந்து பெரும்பான்மையாகின்றனர். சோலாப்பூரின் ஜனத்தொகை இன்று ஐந்து லட்சம் இருக்கும். ''இதில் ஒரு லட்சத்து எழுபத்தையாயிரம் பேர் ஆந்திரர்களாக இருப்பார்கள் ; லட்சத்து இருபத்தையாயிரம் பேர் கன்னடியர்களாக இருப்பார்கள். மிகுந்தவர்கள்தான் மராட்டியர்'' என்கிறார் பாபுராவ் ஜக்கல் என்ற ஷோலாப்பூர் பெரியார்.

ஸ்ரீமான் பாபுராவ் ஜக்கல் ''ஸமாச்சார்'' என்ற தினப் பத்திரிகையின் அதிபர் ; ஆசிரியர். மராட்டியில் நடக்கும் இப்பத்திரிகையைத் தொடங்கியவர் ஜக்கல் அவர்களின் தகப்பனாராவார். இப்பொழுது ஜக்கலுக்கு எழுபது வயதாகிறது. பத்திரிகையின் வயது தொண்ணூறு ஆகிறது. இவருடன் அளவளாவிக் கொண்டிருந்தது, மிகப் பயனுள்ள நேரமாக இருந்தது.

அவர், இந்த ஷோலாப்பூரைத் தொடங்கியது அல்லது நிறுவியது சித்தேஸ்வர் என்ற லிங்காயத் பக்தர் என்றார். பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றியவர். வீர சைவ மரபைச் சேர்ந்தவர். இவர் ஒரு மரத்தடியில் கிடைத்த லிங்கத்தை வைத்துப் பூசை செய்து வந்தார். அந்தச் சமயம் நன்னப்பா என்ற சிற்றரசன் ஆண்டு வந்தான். அவன் மனைவி சாமுண்டி தேவிக்குக் கனவில் இந்த சித்தேஸ்வர் என்ற யோகிக்கு எட்டு கோச பூமியை வழங்கும்படி ஓர் அருள்வாக்குப் பிறந்ததாம். அதன்படி சித்தேஸ்வர் தாம் வழிபட்ட ஈசனுக்குச் சிவாலயமும், அதில் 68 லிங்கங்களும் பிரதிஷ்டை செய்தாராம். ஷோலாப்பூர் தண்ணீர் இல்லாத பிரதேசமாதலால் கோவிலைச் சுற்றிக் குளம் எடுப்பிக்கச் செய்தார். கோயிலைச் சுற்றிப் பதினாறு கிராமங்கள் இருந்த ஊரானதால், இவ்வூருக்கு 'ஸோலாபுர்' என்று பெயர் வந்ததாம். ஸோலா என்றால் பதினாறு. இன்றும் சித்தேஸ்வர் ஆலயத்தில் லிங்காயத்துகள்தாம் பூஜைவழிபாடுகள் செய்கின்றனர். கோயிலைச் சுற்றி நீர் நிலை ஏற்பட்டவுடன் பாமினி வம்ச மன்னர்கள் அதை அகழியாகக் கொண்டு கோட்டை கட்டினர். இக்கோட்டையில் பல மன்னர்கள் தங்கியிருக்கின்றனர். அவுரங்கசீப் தம் மகள் ஜேபுன்னிஸாவுடன் தங்கியிருக்கிறார். இப்படிப் பல மன்னர்கள் தங்கி வாழ்ந்த கோட்டை பாழடைந்து, கல்லும் முள்ளும் புதரும் மண்டிக் கிடக்கிறது. ஆனால் அதற்கு வெளியே ஏரிக்கு நடுவில் சித்தேஸ்வரர் ஆலயம் இன்னும் சிறப்பாக விளங்குகிறது. இறைவனின் திருவிளையாடலை நினைத்து வியக்காமல் இருக்க முடியவில்லை.

பத்மசாலியர் என்று நெசவுத் தொழில் புரியும் தெலுங்கர் மார்க்கண்டேய ஆலயம் என்ற ஆலயத்தைச் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

மராட்டியர்களுக்கோ நாற்பது மைல் தொலைவில் உள்ள பண்டரிபுர விட்டல், அவர்கள் உள்ளத்தையும் உடலையும் ஆட்கொள்ளும் தெய்வமாக விளங்குகிறான்.

ஆக, ஸோலாப்பூர் தோன்றியதே கன்னடியர்கள் காரணமாக. எனினும், கன்னடியர்களும் தெலுங்கர்களும் மராத்தியரும் மிக அந்நியோன்னியமாக வாழ்ந்து வருகின்றனர். 1930ல் சுதந்திரப் போராட்டம் நடந்த போது, ஷோலாப்பூர் வீர எழுச்சி கொண்டு விளங்கியது ! அன்றைய ஆட்சியில் இருந்த பிரிட்டிஷார், ''மார்ஷல் லா'' பிரகடனம் செய்து ராணுவ அடக்குமுறையைப் பிரயோகித்தனர். அன்று சுதந்திரப் போரில் ஈடுபட்ட வீர இளைஞர்களில் நால்வரைத் தூக்கிலிட்டனர். அப்படித் தூக்கிலிடப்பட்ட நால்வர் யார் யார் என்பது மிகச் சுவையான தகவலாகும். மல்லப்ப தானப்ப ஷெட்டி — (லிங்காயத் — கன்னடியன்), குர்பான் — ஹூஸைன் (முஸ்லிம்), ஸ்ரீகிஷன் ஸாரதா (மார்வாடி), ஜகந்நாத் ஷிண்டே — (மராத்தியன்) இப்படி மொழி, இனம், மதம் ஆகியவற்றில் வேறுபட்டவர் ஒன்றுபட்டு தாய்நாட்டுக்காக உயிரைத் திரணமாக மதித்துப் போரிட்ட நாட்டிலே, சுதந்திரத்துக்குப்பின் மொழிவாரி மாகாணப் பிரிவினை ஏற்பட்டு இன்றும் பிரதேசப் பித்து நிலவுவதைக் காணப் பரிதாபமாக இருக்கிறது.

---



''ஏண்டா, கண்ணா, இப்படி அழுறே ?''

''அப்பா ஏணியில் ஏறும்போது தவறிக் கீழே விழுந்துட்டார் அம்மா.''

''இதற்காக யாராவது அழுவார்களா, என்ன ? நானாக இருந்தால் கைக் கொட்டிச் சிரித்திருப்பேன்.''

''நானும் அதையேதான் செய்திருப்பேன். ஆனால் அப்பா என் மேலேயே விழுந்துட்டாரே, அம்மா!''

-- சரசுவதி பத்ம

**காரியவாதிகள்!**

**உகாண்டா நாட்டில் 'என்டப்' விமான நிலைய சம்பவம் நினைவிருக்கிறதா? அது பற்றி ஐந்து சினிமாப் படங்கள் மேல்நாடுகளில் இம் மாதம் திரையிடப்படுகின்றன!**

பாபு - இந்துஸ்தான் டைம்ஸ்

ஷோலாப்பூர் நகரசபை, கார்ப்பொரேஷன் என்ற அந்தஸ்தைப் பெற்றுவிட்டாலும் நகரத்தை ஒரு முறை சுற்றி வந்தால் ஒரு பெரிய கிராமத்தைச் சுற்றி வந்தாற்போல் தோன்றும். கார்ப்பொரேஷன் கட்டடமிருக்கும் அந்தப் பங்களா, அப்பா சாகேப் வாரத் என்ற தனவானால் கட்டப்பட்டது. லோகமான்ய திலகரின் அத்தியந்த நண்பர். திலகர் இக்கட்டடத்தில் பல முறை தங்கியிருக்கிறார். ''திலகருக்கு ஷோலாப்பூர் என்றால் தனியான அபிமானம்'' என்று பெருமிதத்தோடு கூறினார் பெரியவர் பாபுராவ் ஜக்கல்.

சங்கமேசுவரர் கல்லூரியின் பிரின்ஸ்பால் திரு கே. போகேஷ்யானன் அவர்களைச் சந்தித்தேன். ''எங்கள் ஷோலாப்பூரில் மத்தியதர வர்க்கம் என்பது கிடையாது. ஒன்று ஒரு சில பணக்காரர்கள்; அடுத்தாற்போல் தொழிலாளர்கள். இதனால் பல ஆண்டுகள் கல்லூரிகளில் மாணவர்கள் அதிகம் இல்லாமல் இருந்தார்கள். இப்பொழுது தொழிலாளரிடையும் கல்லூரிப் படிப்பு பயில வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட்டுள்ளது. பல தொழிலாளர் குடும்பத்தைச் சேர்ந்த மாணவர்களும் மாணவிகளும் பயில்கின்றனர்'' என்றார்.

சட்டக் கல்லூரி, வைத்தியக் கல்லூரி, ஐ. டி. ஐ. இன்ஜினீரிங் கல்லூரி — இப்படிப் பல கல்லூரிகளைச் சேர்த்து இன்று ஷோலாப்பூரில் பத்தாயிரம் மாணவர்கள் படிக்கின்றனர். எல்லாக் கல்லூரிகளுமே மாணவியரும் மாணவர்களும் சேர்ந்து படிக்கும் கல்லூரிகள் தாம். கல்லூரி வராந்தாவில் மாணவியரும் மாணவரும் பரஸ்பர அன்பும் மரியாதையும் கொண்டு கௌரவமாக அளவளாவுவதைக் காண மகிழ்ச்சியாக இருந்தது.

இத்தனை மாணவர்கள் படிக்கிறார்கள்; இத்தனை மில் ஆலைகள் இருக்கின்றன! ஐந்து லட்சம் மக்களுக்கு மேல் வாழ்கிறார்கள். எனினும், நகர பஸ்கள் யாவும் காலியாகத்தான் ஓடுகின்றன. சென்னையில் நெரிசலான பஸ்களில் பிரயாணம் செய்துவிட்டு வந்த எனக்கு, ஸோலாப்பூர் நகர பஸ்களைப்பார்த்த போது மிகுந்த ஆறுதலாக இருந்தது. இதை நிர்வகிக்கும் நகரமன்ற கமிஷனர் சுந்தரம், '' நாற்பது பஸ்கள் ஓட்டுகிறோம். நஷ்டமல்லவோ அடைந்து வருகிறோம்! நஷ்டமாயினும் பொதுமக்களுக்கு இந்த வசதி அளிப்பது கடமை என்று அளித்து வருகிறோம்'' என்றார். ஷோலாப்பூரில் பெரும்பான்மையோர் நடந்தே தங்கள் தொழிற்கூடங்களுக்குச் சென்று விடுகின்றனர்.

ஸோலாப்பூரில் முக்கியமான திருவிழா தைப் பொங்கலின் போது நடைபெறுகிறது. ஆனால் அதனை இங்கு பொங்கல் திருவிழாவாகக் கொண்டாடுவதில்லை. ஸோலாப்பூரை நிறுவிய யோகி சித்தேஸ்வரிடம், ஒரு மாது மிகுந்த பக்தி கொண்டிருந்தாளாம். அந்தப் பக்தியின் விளைவாக அவரையே திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தன் விருப்பத்தைத் தெரிவித்தாளாம். யோகி, ''என்னைக் கல்யாணம் செய்து கொள்வதாவது? வேண்டுமானால் என் கோலைக் கல்யாணம் செய்து கொள்'' என்று தமது கைக் கோலைக் கொடுத்தாராம். அதையே அவருடைய கருணை என்ற அந்த மாது கருதித் திருமணம் செய்து கொண்டாளாம். திருமணம் செய்து கொண்டதிலேயே தனது பிறவிப் பயனை அடைந்துவிட்டதாகக் கருதி இனி உடலை வைத்துக் கொண்டிருப்பதில் பயனில்லை என்று அக்னி வளர்த்து அதில் விழுந்து தன்னை மாய்த்துக் கொண்டாளாம். இன்றும் ஸோலாப்பூர் சுற்றுவட்டாரத்தில் உள்ள லிங்காயத்துக்கள் இருபதடி, முப்பது அடி உயரம் உள்ள அலங்கரிக்கப்பட்ட கனமான கோலை ஏந்தி வந்து, சித்தேஸ்வரர் ஆலயத்துக்கு அண்மையில் உள்ள மைதானத்தில் அக்னி வளர்த்து பெருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள். இதற்கு 'காட்டி' விழா என்று பெயர். 'காட்டி' என்றால் கோல்!

மகாராஷ்டிரப் பெண்கள் வாமணி என்ற நாடோடிப் பாட்டு வகையில் மிகவும் ஈடுபட்டவர்கள். ஷோலாப்பூரைச் சேர்ந்த ராம்ஜோஷி என்ற கவிஞர் லாமணி என்ற சிருங்கார வகைப் பாடல்கள் பல யாத்துப் புகழ் பெற்றவர். பிறகு இதே மெட்டில் பக்திமயமான பாடல்களையும் பாடியிருக்கிறார்.

ஷோலாப்பூர் வரை வந்துவிட்டுப் பாண்டுரங்கனைத் தரிசனம் புரியாமல் திரும்புவது முறையாகுமா?

பீமா என்ற நதி, பண்டர்புரி அருகில் சற்று வளைந்து போகிறது. அதற்குச் சந்திரபாகா என்று பெயர். அந்தப் பண்டரிபுரியிலும், பீமா நதிக் கரையிலும் ஞானேசுவர், ஏகநாதர், நாமதேவர், துக்காராம், கோரா கும்பர், லட்சுமிபாய் என்ற எத்தனையோ மகான்கள், இடுப்பில் கை வைத்துக் கொண்டு செங்கல்லின் மேல் நிற்கும் பாண்டுரங்கனை எவ்வளவோ மனமுருகிப் பாடியிருக்கிறார்கள். பாடல் பெற்ற ஸ்தலம் என்றும், மங்களா சாஸனம் செய்யப்பட்ட தலம் என்றும் கூறப்படும் தமிழ் நாட்டுத் தெய்விக ஸ்தலங்களைப் போன்ற மிகப் புனிதமான க்ஷேத்திரம் பாண்டுரங்கன் எழுந்தருளிய பண்டரிபுரம். சிதம்பரம் கோயிலைத் தீட்சிதர்கள் ஆள்வதுபோல் பாண்டுரங்கனைப் படுவா என்ற பிராம்மண வகுப்பார் ஆள்கிறார்கள். கோயிலைத் தவிர ஜீவனோபாயத்துக்கு அவ்வூரில் வேறு வழியில்லாததால் படுவாக்கள் யாத்திரிகர்களிடம் பணம் பறிக்கப் பார்ப்பார்கள்! எச்சரிக்கை தேவை! நாமதேவர் முதல் படியிலேயே உட்கார்ந்திருக்கிறார், ''படியாய்க் கிடந்து உன் பவழ வாய்க் காண்பேனே'' என்று ஆழ்வார் பாடிய அதே கருத்தோடு. அது மட்டும் அல்ல, பக்தர்களின் பாத தூசி தன் மேல் பட வேண்டும் என்ற எண்ணத்திலும்தான்! மெய்சிலிர்த்துப் போனேன்.

# ‘முதியோர்க் கழகு அல்லலின்றி இருத்தல்’

## பாங்க் ஆஃப் இந்தியாவின் புதுமொழி

வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின் பணக் கவலைகளிலிருந்து முற்றிலும் விடுபட்டால் மட்டுமே ஓய்வை நிம்மதியாக அனுபவிக்க முடியும்.

நீங்கள் வேலையிலிருந்து ஓய்வு பெறும் பொழுது கிடைக்கும் பிராவிடண்ட் ஃபண்ட், கிராச்சுயிடி போன்ற மொத்தத் தொகைகளை முன்யோசனையுடன் முதலீடு செய்ய வேண்டும்.

அதற்குச் சிறந்த வழி, உங்கள் பணத்தில் ஒரு பகுதியை எமது டபிள் பெனிஃபிட் (இரட்டைப் பயன்) டெபாசிட் சர்ட்டிஃபிகேட்டிலும், மீதியை எமது மாத வருமான சர்ட்டிஃபிகேட்டிலும் முதலீடு செய்வதே. டபிள் பெனிஃபிட் டெபாசிட் சர்ட்டிஃபிகேட் உங்கள் மூலதனத்தின் பேரில் அதிகபட்ச வருமானத் தருகிறது. அதே சமயம் மாதவருமான சர்ட்டிஃபிகேட் உங்கள் அன்றாட செலவுகளை ஈடுகட்ட, பென்ஷன் போன்ற மாத வட்டியைத் தருகிறது.

நீங்கள் உழைத்துப் பெற்ற ஓய்வு காலத்தை நிம்மதியாக அனுபவிப்பதற்கு பாங்க் ஆஃப் இந்தியாவின் இந்த இருவழிப் பாதுகாப்பை நாடுங்கள்,

> [illegible] சேர்ந்த பென்ஷனர்கள் பம்பாய், தில்லி, கல்கத்தா, சென்னை, ஐதராபாத், பெங்களூர் மற்றும் லக்னோவிலுள்ள எமது கிளைகளிலிருந்து இப்பொழுது மாதாந்தர பென்ஷனைப் பெறலாம்.

உதவிக்கு, அருகாமையில் உள்ள பாங்க் ஆஃப் இந்தியாவின் கிளையை அணுகுங்கள்.



**பாங்க் ஆஃப் இந்தியா**

(ஒரு இந்திய அரசு நிறுவனம்)

**சேவையின் சிறப்பிடம்**

CONCEPT-BOI-2625 TM

# முகூர்த்தம் நெருங்குகிறது; முடியுங்கள் சண்டையை!

'அரசியல் சாசனம் பற்றி நிறைய விவாதங்கள் நடக்கட்டும்' என்று பிரதமர் சொன்னாலும் சொன்னார், பத்திரிகைகளி லெல்லாம் ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதி அமர்க்களப்பட்டது! அரசியல் சாசன 44வது மாறுதல் மசோதாவில், 'இது தப்பு, அது தவறு' என்று அவரவரும் சுட்டிக் காட்டிச் சுடச்சுட எழுதினார்கள்.

கிடைத்த சந்தர்ப்பத்தில் அகப்பட்ட மேடையில் துணிந்து பேசிய தலைவர்கள் சிலர் குற்றம் குறைகளை அடுக்க ஆரம்பித்தார்கள்.

'அரசியல் சாசனத்தை மாற்ற, ஓர் அரசு உத்தரவால் நீடிக்கப்பட்டுள்ள இந்த நாடாளுமன்றத்துக்கு உரிமை இல்லை; எனவே, நாங்கள் நாடாளுமன்ற விவாதத்தில் கலந்து கொள்வதில் அர்த்தமேயில்லை' என்று சில எதிர்க் கட்சியினர் ஒரே போடாகப் போட்டு விட்டனர்.

வேறு சில எதிர்க் கட்சிகள் ரொம்பவும் சிரமப்பட்டு '44வது மாறுதல் விஷயம் இல்லை இது' என்பது அவர்கள் கூறும் காரணம்.

இவ்வாறு எதிர்க் கட்சியினரும் அறிஞர் பெருமக்களும் தங்கள் சாமர்த்தியத்தைக் காட்டும்போது காங்கிரஸ்காரர்கள் சும்மா இருப்பார்களா? சிலர், 'இரு நாடாளுமன்றங்களையும் சேர்ந்த தேர்வுக் குழுவினிடம் மசோதாவைப் பரிசீலனைக்கு விட வேண்டும்' என்றார்கள். வேறு சிலர் இன்னும் ஒரு படி மேலே போய் ரொம்பத்தான் துணிச்சலுடன் 'புதிதாக ஓர் அரசியல் நிர்ணய சபையை அமைத்தே இவ்வளவு பெரிய மாறுதல்களைச் செய்ய வேண்டும்; அல்லது புதிதாக ஒரு சாசனத்தை உருவாக்க வேண்டும்' என்று அபிப்பிராயம் தெரிவித்தார்கள்.

இவ்வளவும் போதாதென்று மசோதாவை நாடாளுமன்றம் விவாதிக்கும் போது கவனிக்கப்படுவதற்காக **அறுநூறு** திருத்தப் பிரேரணைகளைக் காங்கிரஸ், எதிர்க்கட்சி, சுயேச்சை உறுப்பினர்கள் கொண்டு வந்துள்ளனர்.

**கல்கி** மலர் 36 இதழ் 15



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

மசோதாவில் உள்ள குறைபாடுகளைப் பட்டியல் போட ஆரம்பித்தன.

கட்சிகள் விஷயம் இப்படியென்றால் அறிஞர்கள் வேறு தங்கள் கை வரிசையைக் காட்ட ஆரம்பித்தார்கள். பம்பாய்ப் பெருமக்கள் ஏழு பேர் கூட்டாகக் கையெழுத்துப் போட்டுப் பிரதமருக்குக் கடிதம் வரைந்திருக்கிறார்கள். அதில், 'இப்போது நெருக்கடி நிலைப் பிரகடனம் இருப்பதால் அரசியல் சாசன மாறுதல்கள் பற்றிப் பேச வேண்டியவர்கள், பேச அருகதையுள்ளவர்கள் சுதந்திரமாகப் பேசக்கூடிய சூழ்நிலை நிலவவில்லை; எனவே, அடுத்த பொதுத் தேர்தல் வரை விவாதத்துக்கு இடமளித்துத் தேர்தலுக்குப்பின் மாறுதல்களைச் செய்யலாம்' என்று கூறியுள்ளார்கள்.

இது போதாதென்று வேறு முந்நூறு அறிஞர்கள் நேரே குடியரசுத் தலைவரிடமே மனு கொடுத்தார்கள். 'அரசியல் சாசன 44வது மாறுதல் மசோதா ஆய்வை நிறுத்திவையுங்கள்' என்று கேட்டுக் கொள்கிறது அந்த மனு. 'ஓடுகிற ஓட்டத்தில் தீர்மானிக்கிற

பார்த்தார் பிரதமர். அரசியல் சாசன மாறுதலுக்கு முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருக்கும்போது இன்னும் சம்பந்திச் சண்டையே முடியவில்லையே, மாப்பிள்ளைக்கு ஒன்றரைக் கண் என்றும் காது செவிடு என்றும் இன்னுமா குறை சொல்லிக் கொண்டிருப்பது? என்று நினைத்தார் போலும்!

'தேர்வுக் குழுவும் வேண்டாம், புதிய அரசியல் நிர்ணயசபையும் வேண்டாம்! அரசியல் சாசனத்தை மாற்ற இப்போதுள்ள நாடாளுமன்றத்துக்கே பூரண உரிமை உண்டு; அதுவே போதும்! மேலே காரியம் ஆகட்டும் ம்...ம்...' என்று அழுத்தம் திருத்தமாக அடித்துப் பேசினார்.

இதோ, நாடாளுமன்றத்தில் முதல் ஆய்வு முடிந்து சட்ட மந்திரி இப்போது பதில் கூறிக் கொண்டிருக்கிறார். இரண்டாவது, மூன்றாவது ஆய்வுகளும் சீக்கிரமே முடிந்து, குறித்த சுப முகூர்த்தத்தில் 44வது மாறுதல் மசோதா நிறைவேறிவிடும் என்று எதிர்பார்க்கலாம்.

கெட்டி மேளம்! கெட்டி மேளம்! சுபமஸ்து!

# பச்சை குத்திக் கொள்ளுங்கள்!

அ. அ. தி. மு. க. தலைவர், ''பச்சை குத்திக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி வாய் மூடியதுதான் தாமதம், அதற்காகவே காத்திருந்தது போல் ஏகப்பட்ட எதிர்ப்பு கிளம்பி விட்டது.

மாற்றுக் கட்சியினர் மட்டுமின்றி அந்தக் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டோரும் பச்சை குத்துவது பற்றிப் பச்சை பச்சையாகப் பேசித் தீர்த்தார்கள் !

யோசித்துப் பார்த்தால் பச்சை குத்திக் கொள்வதில் அப்படியொன்றும் பெரிய தீமை இருப்பதாக நமக்குத் தெரியவில்லை; மாறாக நன்மைகளே பல விளையக்கூடும்!

உதாரணமாக அ. அ. தி. மு. க.வினர் மட்டுமின்றி எல்லாருமே பச்சை குத்திக் கொள்வது என்று ஆரம்பித்தால் பேட்டைக்குப் பேட்டை பச்சை குத்தும் நிலையங்கள் ஆரம்பிக்கலாம். பல்லாயிரக்கணக்கான பேர்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்பட்டதாக ஆகும் ! வேலையில்லாத் திண்டாட்டம் என்ற கூப்பாடு குறையும்.

பச்சை குத்தும் நிபுணர்களுக்குக் கிராக்கி அதிகமாகுமாதலால் பச்சை குத்தும் நிபுணர் பயிற்சிக் கல்லூரிகளைத் தோற்றுவிக்கலாம். இவற்றில் பல ஆசிரியர்களுக்கும் பேராசிரியர்களுக்கும் வேலை கிடைக்கும் ! பாரதத்தில் எத்தனைவிதமான கட்சிகள் உள்ளன, அவற்றுக்கு என்னென்ன சின்னங்கள், அவற்றை எப்படி வரைவது என்பனவற்றை இக்கல்லூரிகளில் சொல்லிக் கொடுக்கலாம். புதிய கட்சிகளுக்குப் பொருத்தமான சின்னங்கள் பற்றி ஆராய்ச்சிகள் நடத்தலாம் !

இப்படி வேலை பெருக்கும் திட்டம் வெற்றிகரமாக நிறைவேற வேண்டுமானால் எந்தக் கட்சியிலும் சேராதவர்களையும் பச்சை குத்திக் கொள்ளச் செய்ய வேண்டும். அவரவரும் வேலை செய்யும் நிறுவனத்துக்கு ஒரு சின்னம் இருக்கிறதல்லவா ? அந்தச் சின்னத்தைப் பச்சை குத்திக் கொள்ளலாமே ! 'நான் ஒரு வேலையும் செய்யாத சாப்பாட்டு ராமன்' என்று ஒருவன் கூறுவானாகில் அவனையும் சும்மாவிடக் கூடாது. அவனுக்குப் பிடித்த ஜாங்கிரி அல்லது லட்டின் உருவத்தைப் பச்சை குத்திவிட வேண்டும் !

'பச்சை குத்திக் கொள்ளுதல் காட்டுமிராண்டித்தனம்' என்று சிலர் மிரட்டுகிறார்கள். அப்படியொன்றும் எண்ணுவதற்கில்லை. நவநாகரிகமான மேனாட்டினர் பலரும் விரும்பிப் பச்சை குத்திக் கொள்வதில்லையா, என்ன? சிறைக் கைதிகள், விபசாரிகள் போன்றவர்களுக்குத்தான் அந்த நாளில் பச்சை குத்தினார்களா ? காதலன் தன் காதலியின் உருவத்தை அல்லது பெயரைப் பச்சை குத்திக் கொண்டான். காதலியும் அவ்வாறே செய்தாள்.

'தேர்தல் சமயத்தில் கையில் கட்சிச் சின்னம் தெரியும் ; எனவே, தேர்தல் விதிப்படி வோட்டுப் போட முடியாமல் போகும்' என்று ஒருவர் எச்சரித்திருக்கிறார்.

அதனால் என்ன? அதை மறைக்குமாறு முழுக் கை சட்டை தைத்துப் போட்டுக் கொள்ளத் தெரியாதா வாக்காளருக்கு? இப்படி ஃபாஷன் மாறினால் எவ்வளவு நன்மை யோசித்துப் பாருங்கள். முழுக்கை சட்டை தைக்க அதிகம் துணி வேண்டும். எல்லாரும் அதிகத் துணி வாங்கும்போது இப்போது துணி விற்பனை குறைவால் நஷ்டப்பட்டுத் திணறிக் கொண்டிருக்கும் மில்கள் பல புத்துயிர் பெறும். உற்பத்தி மேலும் அதிகரிக்கும்; பொருளாதாரம் செழிக்கும் ! அது போகட்டும், எத்தனை தையல்காரர்களுக்கு எவ்வளவு கூலி அதிகமாகக் கிடைக்கும் !

ஒரு கட்சியிலிருந்து மற்றொரு கட்சிக்கு மாறாமல் இருக்கத்தான் இந்தப் பச்சை குத்தல் ஏற்பாடு என்றாலும் நம் அரசியல் தளபதிகளால், தொண்டர்களால் கட்சி மாறாமல் இருக்கவே முடியாது. அதற்காக வருத்தப்பட வேண்டியதில்லை. பிளாஸ்டிக் ஸர்ஜரியின் உதவியால் அவ்விடத்துத் தோலை நீக்கிவிட்டு வேறு தோலை ஒட்ட வைக்கலாம். இதனால் பிளாஸ்டிக் ஸர்ஜரியில் நமது நாடு உலகம் வியக்க மகத்தான முன்னேற்றம் அடையும் !

பச்சை குத்துவதால் வியாதி வரும் என்று வேறு சிலர் மிரட்டுகிறார்கள். இவர்களுக்கு, ''அக்கூபங்சர்'' பற்றித் தெரியாது போலும். இம்முறையில் வியாதியைக் குணப்படுத்த குறிப்பிட்ட இடங்களில் உடலில் ஊசியால் குத்திவிடுவார்கள். வியாதி இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிடும் ! இம்முறை சீனத்திலும் ஜப்பானிலும் பரவலாக உண்டு. அதுபோல் பச்சை குத்திக் கொள்வதும் உதவுமோ என்னமோ யார் கண்டது ? இதில் ஆராய்ச்சிக்கு நிறைய இடம் இருக்கிறது. தலை வலி என்றால் கத்தியல் சின்னத்தையும் வயிற்றுவலி என்றால் திருகாணி சின்னத்தையும் டாக்டர்கள் பச்சை குத்தும் நாள் விரைவிலேயே வரலாம் !

இப்படிப் பலப் பல முன்னேற்றங்களுக்கு அடித்தளம் அமைக்கும் ஒரு யோசனையை வரவேற்க ஏன் தயங்க வேண்டும்? அனைத்திந்திய அ. தி. மு. க.வினரை மட்டுமின்றி அனைத்திந்தியரையுமே கேட்டுக் கொள்கிறோம்: ''பச்சை குத்திக் கொள்ளுங்கள்!''

---

ராஜாஜி சிந்தனை

## சிரிக்க வைக்கும் சரித்திர ஆசிரியர்

சோர்வான எண்ணங்களிலிருந்து விடுபட இதோ, அர்னால்டு ஜே. டாயின் பீயின் ஒரு கருத்து :

மனிதர்கள் இறவா வரம் பெறாதது ஒருவிதத்தில் நல்லதுதான். தேவர்களைப் போல் நாம் இறவா வரம் பெற்றிருக்கவில்லையே என்று சில சமயம் நான் ஏங்கும் போது என்னை நானே கேட்டுக் கொள்வது இதுதான்: 'எதிர்காலத்தில் எண்ணிமாளாத ஆண்டுகளுக்கு வருமான வரிக்கணக்குத் தயாரித்துக் கொண்டிருப்பதென்பது உனக்கு உடன்பாடா ? பிடிக்குமா ?'

—ராஜாஜி நினைவு மலர்


மேல் நாடுகள்
பெட்ரோல் விலை
அரபு நாடுகள்


எண் ஜோஸியர்
கோகலே
20 நாள் பிரமாதம்னு நினைச்சுகிட்டு இருந்தேன்.. 44 அதைவிட பிரமாதமா 'ஓஹோ'ன்னு இருக்கப் போறது!


தமிழ்நாடு காங்கிரஸ்
இந்தச் சுண்ணாம்பு அடிக்கற வேலையே எனக்குச் சரியாக இருக்கும் போலிருக்கே!
இருபதை மறந்தாயா? இருட்டடிப்பு செய்தாயா? தமிழ்நாடு காங்கிரஸே தாமதம் ஏனய்யா?
யஷ்பால் கபூர்

# எக்காரணத்திற்கும் பொருத்தமானவை பிலிப்ஸ் லூமினேர்கள்







ஒவ்வொரு பிலிப்ஸ் லூமினேரும்
எண்ணற்ற பல கருத்துக்களை
மனதில் கொண்டு உருவாக்கப்பட்ட
தாகும். அழகான தோற்றம் முக்கியம்தான்
என்றாலும் அது சிக்கனம், ஒளித்திறன்,
தரம் இவற்றுக்கடுத்தபடிதான்.
மிகச் சிறந்த மூலப் பொருட்கள்
தேர்ந்தெடுக்கப்படுவதுடன், தயாரிப்பு
முறையும் கடும் பரிசோதனைக்குள்ளாக்கப்
படுகிறது. ஒவ்வொரு தொகுப்பிலிருந்தும் ஒரு
ஸாம்பிள் எடுத்துத் தீவிரமாக செயல்படு
நிலையில் பரிசோதிக்கப்படுகிறது.
ஒவ்வொரு ஒளி அமைப்பிற்கும் ஏற்ற ஒரு
பிலிப்ஸ் லூமினேர் கிடைக்கிறது. சீரான
ஒளியினைப் பெற சிறந்த சாதனப்பிணைப்பு.











## பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்




# பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL 9366

# ஜீவகாருண்யம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

28



உறவுக்காரர்கள் என்றால் அபர காரியம் (நீத்தார் கடன்) ஏதோ ஒரு தினுசில் செய்து விடுகிறோம். செய்வதில் குறையிருக்கலாம். ஆனால் அடியோடு செய்யாமலே விடுவதில்லை. அமாவாஸைத் தர்ப்பணம், சிராத்தம் முதலியவற்றை நிறுத்திவிட்டவர்களாக இருந்தாலும், ஹிந்துக்களாகப் பிறந்தவர்களில் நாஸ்திகர்களைத் தவிர எவரும் பந்துக்களுக்குப் பிரேத சம்ஸ்காரம் (அவரவர் குலாசாரப்படி தகனமோ, அடக்கமோ) செய்ய மட்டும் தவறுவதில்லை.

சரி, உறவுக்காரர்கள் இல்லாமல் நிராதரவாக இருக்கிறவர்களின், இறக்கிறவர்களின் கதி என்ன? அநாதைகள் செத்துப்போகும் போது, அவர்களுடைய சரீரம் என்கிற பகவான் படைத்த மெஷினின் கதி என்னவாகிறது? சமூகமேதான் இவர்களுக்கு ஸம்ஸ்காரம் பண்ண வேண்டும் என்பது சாஸ்திரம்.

இவ்விஷயத்தில் நம் ஹிந்து மதத்தின் அவல நிலைமை எனக்கு வேதனையாக இருக்கிறது. இப்போது நான் சொல்லிச் சொல்லிக் கொஞ்சம் வேதனை தணியும்படியான ஏற்பாடுகள் அங்கங்கே நடந்தாலும், இது போதாது. முன்னெல்லாம் எனக்கு இன்னும் ரொம்ப வேதனையாக இருந்திருக்கிறது. அப்போதெல்லாம் ஆஸ்பத்திரியிலோ, ஜெயிலிலோ, அல்லது நடுத்தெரு ஒன்றிலோ ஒரு ஹிந்து அநாதை செத்துப் போனான் என்றால் எடுத்து சம்ஸ்காரம் செய்ய நம் சமூகத்தில் எந்த ஏற்பாடும் இல்லாமல் இருந்தது. இப்போதுகூட அநேக ஊர்களில் இப்படித்தான் இருக்கிறது. ஆஸ்பத்திரிக்காரர்களே போஸ்ட் மார்ட்டம் பண்ணி, ஆராய்ச்சிக்காகப் பண்ண வேண்டியதைப் பண்ணிப் புதைத்துவிடுவது, முனிஸிபாலிடி அல்லது பஞ்சாயத்துக்காரர்கள் கொண்டு போய்ப் புதைத்துவிடுவது என்றுதான் நடந்து வருகிறது. சாஸ்திரப் பிரகாரமான சம்ஸ்காரமில்லாமல் இப்படி ஒரு சரீரத்தை விடுவது நம் சமூகத்துக்கே களங்கம், பாபம்.

இதர மதஸ்தர்கள் இந்த விஷயத்தில் நல்ல ஏற்பாடுகள் பண்ணியிருக்கிறார்கள். அவர்களுடைய சாஸ்திரப்படி பகவானிடம் ஒரு சரீரத்தை ஒப்பிக்காமல் விடுகிற தோஷம் அந்த சமூகத்துக்கு வருவதே யில்லை.

எந்தக் கட்டுப்பாடும் இல்லாத ஹிந்து சமூகம்தான் இந்தப் பெரிய தோஷத்துக்குப் பாத்திரமாகிக் கொண்டிருக்கிறது. மற்ற மதஸ்தருக்குச் சக்தி வாய்ந்த ஆர்கனைஸேஷன்கள் இருக்கிற மாதிரி நம் சமூகத்தைக் கவனிக்க, யார் இருக்கிறார்கள்? மடம் என்று வைத்துக் கொண்டு உங்கள் பணத்தையெல்லாம் வாங்கிக் கொண்டு, குரு ஸ்தானம் கொண்டாடிக் கொண்டிருக்கிற என்னால் தான் என்ன பிரயோஜனம்? ஆஸேது ஹிமாசலம், இந்தத் தேசத்தில் எங்கே ஓர் அநாதை ஹிந்து செத்துப் போனாலும் அவனை சாஸ்திரப்படி சம்ஸ்காரம் பண்ணுவதற்கு ஓர் ஏற்பாடு செய்ய எனக்கும் கையாலாகவில்லை. ஆனாலும், என்னால் முடிந்தது, இதில் 'குருஸ்தானம்' என்ற பெத்த பேர் எனக்கு இருப்பதால், பொறுப்பும் எனக்குத்தான் ஜாஸ்தி என்றாவது தெரிந்து கொண்டிருக்கிறேன். நம் சமூகத்தின் நிலைமை இப்படி இருக்கிறதே என்று நிஜமாகத் துக்கப்படுகிறேன். என் வார்த்தையைக் கேட்கக் கூடியவர்கள் என்று தோன்றுகிற உங்களிடம் என்னால் முடிந்த மட்டும் சொல்கிறேன்.

நீங்கள் பாபம் பண்ணினால், அது உங்களைத் திருத்தாமலே 'குரு' என்று பேர் மட்டும் வைத்துக் கொண்டிருக்கிற என்னைத்தான் சேரும். எனக்கு நீங்கள் நமஸ்காரம் பண்ணுகிறீர்கள் அல்லவா ? அதனால் உங்கள் பாபத்தைப் போக்குகிற பொறுப்பையும் என்னிடம் தான் ஒப்படைக்கிறீர்கள். 'அநாதைப் பிரேதம்' ஒரு பக்கம் இருக்கட்டும் — ஹிந்து சமூகமே அநாதையாக இருக்கிற இப்போது, இந்தச் சமூகத்தை நாதனுள்ளதாக்கி, அது சாஸ்திரப்படி புனிதமாக விளங்கும்படி பண்ண வேண்டிய கடமையை நான்தான் கண்ணும் கருத்துமாக ஆற்றியாக வேண்டும்.

இந்த அநாதைப் பிரேத சம்ஸ்காரத்துக்காகத்தான் ஒவ்வோர் ஊரிலும் 'ஹிந்து மத ஜீவாத்ம கைங்கரிய சங்கம்' என்று ஆரம்பிக்கச் சொல்லி வந்தேன். அநேக ஊர்களில் அப்படி ஏற்பாடு பண்ணி நன்றாக உருவாகியும் இருக்கிறது. முக்கியமாகக் கும்பகோணத்தில் இந்தச் சங்கம் ரொம்பவும் நன்றாக நடந்து வருகிறது. ஆஸ்பத்திரிகாரர்களும், முனிஸிபாலிடிக்காரர்களும், ஜெயில்

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]




# உலக மொழியை உடைப்பிலே போடுவதா?

☐ 'சொல்ல வேண்டிய சில'வாக முத்தான கருத்துக்களைச் சொல்லியிருக்கிறீர்கள்.

உலக அரங்கிலே மிக முக்கியமான மொழியான ஆங்கிலத்தைப் பற்றியே நமது மத்திய கல்வி அமைச்சரகம் எவ்வளவு குறைவாக மதிப்பிட்டு விட்டது? உலகப் பொதுமொழியான ஆங்கிலத்தை மேலும் வளர்ப்பதற்கான வழிமுறைகளை ஆய்வதை விட்டுவிட்டு, இப்படியொரு எண்ணமா?

செங்கவல்லி
31-10-1976 கி. முருகவேள்

☐ தாங்கள் நடத்திய சிறுகதைப் போட்டியில் என்னுடைய சிறுகதையான 'அலை உடைத்துக் கொண்டபோது' என்னும் கதையை வெளியிட்டு என்னை எழுத்துத் துறையில் பிரவேசிக்கச் செய்த தங்கள் பத்திரிகைக்கு என் மனமார்ந்த நன்றி.

எனது இரண்டாவது சிறுகதையும் (எனக்குக் கல்யாணம் செஞ்சு வையுங்கோ) 'தமிழ் மலர்' என்னும் மலேசியப் பத்திரிகை நடத்திய சிறுகதைப் போட்டியில் மூன்றும் பரிசு பெற்றுள்ளது என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை–1
21–10–76 கமலநாபன்

☐ 'அல்லி தர்பார்' நாடக விமரிசனத்தில் '' நாடகத்தில் 'தீம்' இல்லாவிட்டாலும் பரவாயில்லை; தீமை இல்லாவிட்டால் சரிதான்'' என்று விமரிசகர் அற்பத் திருப்திப் பட்டுக் கொள்வதிலிருந்து இன்றைய நாடக உலகம் எதை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பதை நன்கு உணரலாம்.

பெரியமதியாக்கூடலூர்
25–10–76 எஸ். அன்பாழி

---

அதிகாரிகளுமே இந்தச் சங்கத்துக்காரர்களைக் கூப்பிட்டுக் கூப்பிட்டுத் தங்களிடம் சேரும் அநாதைப் பிரேதத்தை ஒப்பிக்கிற அளவுக்கு, அங்கே இந்த உத்தமமான தொண்டு வேர் பிடித்துவிட்டது.

இதற்காகத் தனி சங்கம் இல்லாவிட்டாலும், அந்தந்த ஊர் பஜனை கோஷ்டிகளே வார வழிபாட்டுச் சங்கமும், மற்ற பொது நலப் பணிகளும் பண்ணுவதோடு அநாதைப் பிரேத சம்ஸ்காரத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். நூற்றோடு நூற்றியொன்னு என்று இல்லாமல், தாங்கள் செய்கிற மற்ற எல்லாப் பணிகளையும்விட இதுவே உத்கிருஷ்டமானது என்ற உணர்வோடு செய்ய வேண்டும்.

பரோபகாரத்தைப் பற்றி லெக்சர் அடிக்க ஆரம்பித்தபோது, 'நம் எல்லாராலும் அச்வமேத யாகம் பண்ண முடியுமா ?' என்று ஒரு கேள்வி போட்டேன். அப்புறம் 'எதற்காக அச்வமேதம்?' என்று கேட்டேன். '' ஹய மேத ஸமர்ச்சிதா'' — ''அச்வமேதத்தால் விசேஷமாக வழிபடப்படுபவள்'' என்று அம்பாளுக்கு ஒரு பெயர் இருக்கிறது ; ஆனதால் அம்பிகையின் பூர்ண அநுக்கிரகத்தைப் பெறுவதற்காகவே அச்வமேதம் செய்ய வேண்டும் என்று பதில் சொன்னேன். ஆனால் எல்லாரும், இந்தக் கலிகாலத்தில், ரொம்பவும் நியமங்கள் தேவைப்படும் அச்வமேதம் செய்வது அசாத்தியமாயிற்றே — இதற்கு என்ன பண்ணுவது என்று கேட்டேன். பரோபகாரங்களில் ஒன்றைப் பண்ணினால் அதுவே அச்வமேதத்துக்கு ஸமானம் என்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது என்றும், ஆகையால் இந்தப் பரோபகாரத்தைப் பண்ணிவிட்டால் நாம் அம்பாளின் பூர்ணாநுக்கிரஹத்தைப் பெற்றுவிட முடியும் என்றும் இதற்குப் பதில் சொன்னேன். அப்புறம் பரோபகாரங்கள், ஜீவகாருண்யப் பணிகள் பலவற்றைப் பற்றிக் கதை அளந்து கொண்டே போனேன். ஆனால் இதுவரை அச்வமேதத்துக்கு ஸமமான பலனைத் தருகிற அந்த ஒரு பணியை மட்டும் சொல்லவில்லை. மற்ற எல்லாவற்றையும்விட உயர்ந்ததான அந்தப் பணி என்னவென்றால், அதுதான் அநாதைப் பிரேத சம்ஸ்காரம்.

**அநாத ப்ரேத ஸம்ஸ்காராத்**
**அச்வமேத பலம் லபேத்**

என்பதே சாஸ்திர வசனம்.

பர–உபகாரமாகச் செத்துப் போன இன்னொரு ஜீவனுக்கு இதனால் உதவி பண்ணும் போதே, நமக்குப் பாபம் வராமல், கடமையைச் செய்து, நமக்கும் உபகாரம் பண்ணிக் கொள்கிறோம்.

'இதர மதஸ்தர்கள் ஜெயிலிலும், ஆஸ்பத்திரியிலும், நடுத் தெருவிலும் சம்பவிக்கும் அநாதை மரணங்களில் ஒன்றுகூட விட்டுப் போகாமல் தங்கள் தங்கள் மதப்படி ஸம்ஸ்காரம் செய்கிறார்கள் ; இப்படிப்பட்ட ஹிந்துப் பிரேதங்கள் பெரும்பாலும் சர்க்கார் சிப்பந்திகளாலேயே ஒருவிதமான சடங்கும் இல்லாமல் புதைக்கப்படுகின்றன' என்கிற பாபமும், அவமானமும் நம்மைச் சேராமலிருக்க இப்போதாவது எல்லா ஊர்களிலும் தகுந்த ஏற்பாடு பண்ணியாக வேண்டும்.

(தொடரும்)

# மரம் மற்றும் உலோக மேற்புறங்களின் பளபளப்பான ஃபினிஷுக்கு ஸிக்மாரின் மற்றும் ஸிக்மாலாக் எனுமல்கள்.




**...ஒளிக் கதிர்களின் பளபளப்பான வண்ணங்களைப்போல!**

- வெண்மை என்றும் மாறாத வெண்மை—பழுப்படைவதில்லை, சிராய்வதில்லை, உரிவதில்லை.
- நீடித்துழைக்கும் பளிச்சிடும் இயற்கையான வண்ணங்கள்.

கதவுகள், ஜன்னல்கள் மற்றும் பர்னிச்சருக்கு வண்ணம் பூச

**ஸிக்மாரின்**

சூப்பர்பைன் ஸிந்தெடிக் எனுமல்

**ஸிக்மாலாக்**

ஜெனரல்-பர்ப்பஸ் ஸிந்தெடிக் எனுமல்




ஸிக்மா பெயிண்ட்ஸ் லிட்., 221, டி.என். ரோட், பம்பாய் 400 001

டிஸ்ட்ரிபியூட்டர்கள்: M/s. இண்டோகெம் லிமிடெட், ஈமாலி பில்டிங் 52-54, ரத்தன் பஜார், சென்னை-600 003. போன்: 37602

# ஸிங்கர்*

ஆல்-பர்ப்பஸ்

# ஆயில் மட்டுமே எண்ணெய்ப்பசை ஊட்டும் போதே பாதுகாப்பையும் அளிக்கிறது




எண்ணெய்ப் பசையூட்டிப்
பாதுகாத்துப் பணத்தையும்
மிச்சப்படுத்துகிறது

எங்கும் கிடைக்கிறது



*ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட் மார்க்

**ஸிங்கர்** அளிப்பவை
சிறந்த பொருட்களே

ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி, 207, டி.என். ரோடு, பம்பாய் 400 001

maa. S.S.M-43 TM

# பார்த்திபன் கனவு

அமரர் கல்கி

## அத்தியாயம் 11

## பொன்னனின் சந்தேகம்

பொன்னி ஆற்றின் வெள்ளத்தின் மீது மற்றொரு நாள் பாலசூரியனின் பொற் கிரணங்கள் படிய, நதிப் பிரவாகமானது தங்கம் உருகி வெள்ளமாய்ப் பெருகுவது போல் காட்சி தந்தது. அந்தப் பிரவாகத்தைக் குறுக்கே கிழித்துக் கொண்டும், வைரம், வைடூரியம் முதலிய நவரத்தினங்களை வாரித் தெளித்துக் கொண்டும், பொன்னனுடைய படகு தோணித் துறையிலிருந்து கிளம்பி வசந்த மாளிகையை நோக்கிச் செல்லலாயிற்று. படகில் ஜடா மகுடதாரியான சிவனடியார் வீற்றிருந்தார். கரையில் பொன்னனுடைய மனைவி நின்று, படகு போகும் திசையைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நதியில் படகு போய்க் கொண்டிருந்தபோது, பொன்னனுக்கும் சிவனடியாருக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது :

''பொன்னா ! கடைசியில் இளவரசருடன் எவ்வளவு பேர்தான் சேர்ந்தார்கள் ?'' என்று சிவனடியார் கேட்டார்.

''அந்த அவமானத்தை ஏன் கேட்கிறீர்கள், சுவாமி ! ஆகா ! அந்தக் கடைசி நேரத்தில் மகாராணிக்குச் செய்தி சொல்லும்படி மட்டும் இளவரசர் எனக்குக் கட்டளையிடாமற் போய் இருந்தால்....''

''என்ன செய்து விட்டிருப்பாய், பொன்னா? பல்லவ சைன்யத்தை நீ ஒருவனாகவே துவம்சம் செய்திருப்பாயோ ?''

''ஆமாம், ஆமாம். நீங்கள் என்னைப் பரிகாசம் செய்ய வேண்டியதுதான். நானும் கேட்டுக் கொள்ள வேண்டியது தான். இந்த உயிரை இன்னும் வைத்துக் கொண்டிருக்கிறேன், அல்லவா ? ஆனால், சுவாமி! எனத்துக்காக நான் உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன், தெரியுமா ? மகாராணியின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு உடம்பைச் சுமக்கிறேன்....''

''மகாராணியின் வார்த்தைக்காக மட்டுந்தானா? பொன்னா ! நன்றாக யோசித்துப் பார். வள்ளிக்காகக் கொஞ்சம்கூட இல்லையா ?''

''வள்ளி அப்படிப்பட்டவள் இல்லை, சுவாமி ! எப்படியாவது உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்று நினைக்கிறவள் அவள் இல்லை. வீரபத்திர ஆச்சாரியின் பேத்தி அல்லவா வள்ளி? ஆகா! அந்தக் கிழவரின் வீரத்தைத் தான் என்னவென்று சொல்வேன் ?''

''வீரபத்திர ஆச்சாரி இதில் எப்படி வந்து சேர்ந்தான், பொன்னா ?''

''கிழவனார் சண்டை போடும் உத்தேசத்துடனேயே வரவில்லை. என்ன நடக்கிறது என்று தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால், அந்தச் சமயத்தில் இளவரசர் அநாதை போல் நிற்பதைப் பார்த்ததும் அவருக்கு ஆவேசம் வந்து விட்டது. இளவரசருடைய கட்சியில் நின்று போரிடுவதற்கு ஆயிரம், பதினாயிரம் வீரர்கள் வருவார்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். உண்மையில் வந்து சேர்ந்தவர்கள் என்னைத் தவிர ஐந்தே பேர்தான். அவர்கள் கிராமங்களிலிருந்து வந்த குடியானவர்கள். திடீரென்று நாலாபுறத்திலிருந்தும் வீர கோஷத்துடன் வந்த பல்லவ வீரர்களைப் பார்த்ததும், அந்தக் குடியானவர்கள் கையிலிருந்த கத்திகளைக் கீழே போட்டு விட்டுத் திகைத்துப் போய் நின்றார்கள். இதை யெல்லாம் பார்த்தார் வீரபத்திர ஆச்சாரி; ஒரு பெரிய கர்ஜனை செய்து கொண்டு கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் இளவரசர் நின்ற இடத்துக்கு வந்து விட்டார். கீழே கிடந்த கத்திகளில் ஒன்றை எடுத்துச் சுழற்றத் தொடங்கினார். 'வீர வேல்! வெற்றி வேல் ! விக்கிரம சோழ மகாராஜா வாழ்க!' என்று அவர் போட்ட சத்தம் நெடுந் தூரத்துக்கு எதிரொலி செய்தது. அடுத்த கணத்தில் பல்லவவீரர்கள் வந்து எங்களைச் சூழ்ந்து கொண்

டார்கள். ஆகா! அப்போது நடந்த ஆச்சரியத்தை நான் என்ன வென்று சொல்வேன்? சுவாமி! கிழவனாரின் கைகளில்தான் அவ்வளவு பலம் எப்படி வந்ததோ, தெரியவில்லை! கொல்லுப்பட்டறையில் சம்மட்டி அடித்த கையல்லவா? வாளை வீசிக் கொண்டு இடசாரி வலசாரியாகச் சுற்றிச் சுற்றி வந்தார். தொப்புத் தொப்பென்று பல்லவ வீரர்கள் மண் மேல் சாய்ந்தார்கள். ஏழெட்டு வீரர்களை யம லோகத்துக்கு அனுப்பிவிட்டுக் கடைசியாக அவரும் விழுந்து விட்டார். இதையெல்லாம் தூரத்தில் நின்று தளபதி அச்சுதவர்மர் பார்த்துக் கொண்டிருந்தாராம். கிழவனாரின் வீரத்தைக் கண்டு அவர் பிரமித்துப் போய் விட்டாராம். அதனாலேதான், அந்தத் தீரக் கிழவருடைய உடலைச் சகல மரியாதைகளுடனும் எடுத்துப் போய்த் தகனம் செய்யும் படியாகக் கட்டளையிட்டாராம்.''

''அதில் ஆச்சரியம் என்ன? பொன்னா! வள்ளியின் பாட்டனுடைய வீர மரணத்தைக் கேட்டு உலக வாழ்க்கையை வெறுத்த எனக்குக்கூட உடம்பு சிலிர்க்கிறது. ஒரு தேசமானது எவ்வளவு தான் எல்லா விதங்களிலும் தாழ்வு அடைந்திருக்கட்டும்; இப்படிப்பட்ட ஒரு வீர புருஷனுக்குப் பிறப்பளித்திருக்கும் போது, அந்தத் தேசத்துக்கு இன்னும் ஜீவ சக்தி இருக்கிறது என்று சொல்வதில் தடை என்ன? சோழ நாடு நிச்சயம் மேன்மை அடையப் போகிறது என்ற நம்பிக்கை எனக்கு இப்போது உண்டாகிறது'' என்றார் சிவனடியார்.

சற்றுப் பொறுத்து, ''அப்புறம் என்ன நடந்தது?'' என்று கேட்டார்.

''அப்புறம் என்ன? இளவரசரும் நானும் கிழவருடைய ஆச்சரியமான பராக்கிரமச் செயல்களைப் பார்த்துக் கொண்டே திகைத்து நின்று விட்டோம். அவர் விழுந்ததும் நாங்கள் இருவரும் ஏககாலத்தில், 'ஆகா!' என்று கதறிக் கொண்டு அவர் விழுந்த திசையை நோக்கி ஓடினோம். உடனே, இளவரசரை அநேக பல்லவ வீரர்கள் சூழ்ந்து கொண்டார்கள். நான் வெறி கொண்டவனைப் போல் என் கையிலிருந்த வாளை வீசிப் போரிட ஆரம்பித்தேன். அப்போது, 'நிறுத்து, பொன்னா!' என்று இளவரசரின் குரல் கேட்டது. குரல் கேட்ட பக்கம் பார்த்தேன். இளவரசரைச் சங்கிலியால் பிணைத்திருந்தார்கள். அவர், 'இனி மேல் சண்டையிடுவதில் பிரயோஜனமில்லை. பொன்னா! எனக்காக நீ ஒரு காரியம் செய்ய வேண்டும். மகாராணியிடம் போய் நடந்ததைச் சொல்ல வேண்டும். மேற்கொண்டு என்ன நடந்த போதிலும் என் தந்தையின் பெயருக்கு அவமானம் வரும்படியான காரியம் மட்டும் செய்ய மாட்டேன் என்று நான் சபதம் செய்ததாய்த் தெரியப்படுத்த வேண்டும்' என்றார். எனக்குப் பிரமாதமான ஆத்திரம் வந்தது. 'மகாராஜா! உங்களைப் பகைவர்களிடம் விட்டு விட்டு நான் போகவா?' என்று கத்திக் கொண்டு என் வாளை வீசினேன். பின்புறமிருந்து என் மண்டையில் பலமான அடி விழுந்தது. உடனே



நினைவு தவறிவிட்டது. அப்புறம் காராக்கிரகத்திலே தான் கண்ணை விழித்தேன்.''

''ஓகோ! காராக்கிரகத்தில் வேறு இருந்தாயா? அப்புறம் எப்படி விடுதலை கிடைத்தது?''



''மறு நாளே விடுதலை செய்துவிட்டார்கள். இளவரசரைத் தவிர மற்றவர்களையெல்லாம் மன்னித்து விட்டு விடும்படி மாமல்லச் சக்கரவர்த்தியிடமிருந்து கட்டளை வந்ததாம்'' என்றான் பொன்னன்.

''சக்கரவர்த்தி எவ்வளவு நல்லவர் பார்த்தாயா பொன்னா? உங்கள் இளவரசர் எதற்காக இவ்வளவு பிடிவாதம் பிடிக்க வேண்டும்? அதனால்தானே அவரைச் சக்கரவர்த்தி தேசப் பிரஷ்டம் செய்ய நேர்ந்தது?'' என்றார் சிவனடியார்.

''ஆமாம்; நரசிம்ம சக்கரவர்த்தி ரொம்ப நல்லவர்தான்; பார்த்திப மகாராஜாவும், விக்கிரம மகாராஜாவும் தான் பொல்லாதவர்கள்!'' என்றான் பொன்னன்.

பிறகு, ''நான் சக்கரவர்த்தியைப் பார்த்ததேயில்லை. பார்க்க வேண்டும் என்று ரொம்ப ஆசையாயிருக்கிறது. உறையூருக்கு எப்போதாவது வருவாரா, சுவாமி?'' என்றான்.

''ஆமாம்; சீக்கிரத்திலேயே வரப் போகிறார் என்றுதான் பிரஸ்தாபம். ஏது? பொன்னா! சக்கரவர்த்தியிடம் திடீரென்று உனக்கு அபார பக்தி உண்டாகிவிட்டது போல் தெரிகிறதே! சண்டையில் செத்துப் போகவில்லை என்று கவலைப்பட்டாயே! இப்போது பார்த்தாயா? உயிரோடு இருந்ததனால் தானே உனக்குச் சக்கரவர்த்தியைப் பற்றிய உண்மை தெரிந்து அவரிடம் பக்தி உண்டாகியிருக்கிறது!''

''ஆமாம்; சக்கரவர்த்தியிடம் எனக்கு ரொம்ப பக்தி உண்டாகியிருக்கிறது. எனக்கு மட்டும் இல்லை; இதோ என்னுடைய வேலுக்கும் பக்தி உண்டாகியிருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டே பொன்னன் படகின் அடியில் கிடந்த வேலை ஒரு கையால் எடுத்தான்.

''இந்த வேலுக்குச் சக்கரவர்த்தியிடம் சொல்லி முடியாத பக்தி; அவ

ருடைய மார்பை எப்போது தழுவப் போகிறோம் என்று தவம் கிடக்கிறது!'' என்று சொல்லிப் பொன்னன் சிவனடியாரின் மார்புக்கு நேரே வேலை நீட்டினான்.

சிவனடியார் முகத்தில் அப்போது புன்சிரிப்புத் தவழ்ந்தது. ''பொன்னா ! நான்தான் சக்கரவர்த்தி என்று எண்ணி விட்டாயா, என்ன?'' என்றார்.

பொன்னன் வேலைக் கீழே போட்டான்.

'' சுவாமி ! சக்கரவர்த்தி எவ்வளவு தான் நல்லவரா யிருக்கட்டும் ; மகா வீரராயிருக்கட்டும் ; தெய்வாம்சம் உடையவராகவே இருக்கட்டும். அவர் எனக்குப் பரம சத்துரு ! ஒரு நாள் இல்லாவிட்டால் ஒருநாள் அவரை நான் நேருக்கு நேர் காண்பேன். அப்போது....'' என்று பொன்னன் பல்லை நெற நெறவென்று கடித்தான்.

சிவனடியார் பேச்சை மாற்ற விரும்பியவராய், ''ஏன் பொன்னா! அன்றைய தினம் மாரப்ப பூபதி உங்களுக்கு அருகில் வரவே இல்லையா?'' என்று கேட்டார்.

''அந்தச் சண்டாளன் பேச்சை ஏன் எடுக்கிறீர்கள் ? அவன் இளவரசரையும் தூண்டிவிட்டு விட்டு, அச்சுதவர்மரிடம் போய்ச் சகல விவரங்களையும் தெரிவித்து விட்டான். அப்படிப்பட்ட துரோகி அன்றைக்கு ஏன் கிட்ட வரப் போகிறான்? ஆனால், சுவாமி ! அவனுடைய வஞ்சகப் பேச்சில் நாங்கள் எல்லாருமே ஏமாந்து போய்விட்டோம். வள்ளி ஒருத்தி மட்டும், 'பூபதி பொல்லாத வஞ்சகன்; அவனை நம்பக்கூடாது' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். அவள் சொன்னதுதான் கடைசியில் சரியாய்ப் போச்சு'' என்றான் பொன்னன்.

''வள்ளி ரொம்பவும் புத்திசாலி, பொன்னா! சந்தேகமேயில்லை. அவள் ஒரு பெரிய தளபதியின் மனைவியாக இருக்கத் தகுந்தவள்....''

'' என்ன சொன்னீர்கள், சுவாமி !''

''வள்ளி ஒரு பெரிய சேனாதிபதியின் மனைவியாக இருக்கத் தகுந்தவள் என்றேன்.''

'' நீங்கள் சொன்ன இதே வார்த்தையை இதற்கு முன்னாலும் ஒருவன் சொன்னதுண்டு.''

''யார் அது ?''

''மாரப்ப பூபதிதான்; அவன் சோழ சேனாதிபதியாயிருந்த காலத்தில் அப்படிச் சொன்னான்.''

''ஓகோ !''

'' எனக்கு ஒவ்வொரு சமயம் என்ன தோன்றுகிறது, தெரியுமா ? தாங்கள் கோபித்துக் கொள்ளாமல் இருந்தால் சொல்லுகிறேன்.''

''தாராளமாய்ச்சொல்லு, பொன்னா! நான் சந்நியாசி; ஐம்புலன்களையும் அடக்கிக் காமக் குரோதங்களை வென்றவன்.''

''நீங்கள்கூட மாரப்ப பூபதியின் ஆளோ, அவனுடைய தூண்டுதலினால் தான் இப்படி வேஷம் போட்டுக் கொண்டு வஞ்சகம் செய்கிறீர்களோ ?— என்று தோன்றுகிறது.''

சிவனடியார் கலகலவென்று சிரித்து விட்டு, ''இதைப் பற்றி வள்ளியின் அபிப்பிராயம் என்ன ? அவளை எப்போதாவது கேட்டாயா ?'' என்றார்.

''வள்ளிக்கு உங்களிடம் ஒரே பக்தி. 'நயவஞ்சகனை நம்பி மோசம் போவாய்; உத்தம புருஷரைச் சந்தேகிப்பாய்!' என்று என்னை ஏசுகிறாள். மாரப்ப பூபதி இப்படிப்பட்ட பாதகன் என்று தெரிந்த பிறகு அவளுடைய கை ஓங்கி விட்டது. என்னைப் பரிகாசம் பண்ணிக் கொண்டேயிருக்கிறாள்.''

''நான்தான் சொன்னேனே, பொன்னா, வள்ளி புத்திசாலி என்று. அவள் புத்திமதியை எப்போதும் கேளு. வள்ளி தளபதியின் மனைவியாயிருக்கத் தகுந்தவள் என்று நான் சொன்னது மாரப்ப பூபதி சொன்ன மாதிரி அல்ல; நீயும் தளபதியாகத் தகுந்தவன்தான்!''

''ஆமாம், யார் கண்டது? விக்கிரம மகாராஜா சோழ நாட்டின் சிம்மாசனம் ஏறும்போது, ஒருவேளை நான் தளபதியானாலும் ஆவேன்.''

''இரண்டும் நடக்கக் கூடியதுதான்.''

'' ஆகா ! இந்தப் பெரிய பாரத பூமியில் எங்கள் இளவரசருக்கு இடம் இல்லை என்று கப்பலில் ஏற்றி அனுப்பி விட்டாரே, சக்கரவர்த்தி! அவருடைய நெஞ்சு எப்படிப்பட்ட கல் நெஞ்சு. அதைக் காட்டிலும் ஒரே அடியாக உயிரை வாங்கியிருந்தாலும் பாதகம் இல்லை....''

'' நீ சொல்வது தவறு, பொன்னா ! உயிர் உள்ளவரையில் எப்படியும் நம்பிக்கைக்கு இடமுண்டு. ஒருநாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நம்முடைய மனோரதங்கள் நிறைவேறும். நீ வேணுமானால் மகாராணியைக் கேட்டுப் பார். மகன் இந்த மட்டும் உயிரோடு இருக்கிறானே என்று மகாராணிக்குச் சந்தோஷமாய்த் தான் இருக்கும்.... அதோ மகாராணிபோல் இருக்கிறதே !'' என்று சிவனடியார் வியப்புடன் சொன்னார்.

அப்போது படகு வசந்த மாளிகைத் தீவின் கரைக்குச் சமீபமாக வந்து கொண்டிருந்தது. கரையில் அருள்

# பிரச்னைகள் தீர

## ஸ்டேன்ஸ்டயர்



ஸ்டேன்ஸ் டயர்
ரீட்ரெடுகள் மிகவும்
நம்பகமானவை.

ஸ்டேன்ஸ் டயர், புகழ்
வாய்ந்த டயர்ஸோல்ஸ்
பிரத்தியேக அம்சங்களை
வழங்குகிறது —
தன்னிகரற்ற நீண்ட
உழைப்பு.

ஸ்டேன்ஸ் டயர் சிக்கன
மானதும் கூட — ஒரு
டயரை பல்முறை
ரீடிரெட் செய்ய, கூடுதல்
வாய்ப்பு — மிகக்
குறைவான செலவில்
பல்லாயிரம் மைல்கள்.

தாமதமின்றி, சேவை
பெற உடனே
அணுகவும்.

**STANESTYRE**

**ஸ்டேன்ஸ்டயர்**

அண்டு ரப்பர் ப்ராடக்ட்ஸ் லிமிடெட
திருச்சி ரோடு, கோயமுத்தூர்

தொழிற்சாலைகள்:—
சென்னை, வேலூர்,
திருச்சி, சேலம், மதுரை,
தூத்துக்குடி, பெங்களூர்,
மங்களூர், விஜயவாடா,
செகந்திராபாத், எர்ணா
குளம், கோட்டயம்,
கள்ளிக்கோட்டை,
திருச்சூர்.

MAC (B) ST-1775

புதிய

# டால்ஃப்®

# மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து 100% உத்தரவாதம்

## வாரக்கணக்கிலும் ...குறைந்த செலவிலும்



புதிய டால்ஃப், மூட்டைப் பூச்சிகளை ஒழித்து, உங்களுக்கு 100% விடுதலை அளிக்கிறது.



புதிய டால்ஃப், தெளிக்கப்பட்ட இடத்தில் வாரக்கணக்கில் தங்கிச் செயலாற்றுகிறது. (அது தெளிக்கப்பட்ட இடத்திலிருக்கும் வீரியமுள்ள மருந்துப் படலத்தைத் துடைத்து விடாதீர்கள்)

**நெடுங்காலம் 'தங்கிச் செயலாற்றும்' அபார சக்தி!**

சக்தி வாய்ந்த புதிய டால்ஃப் மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து வாரக்கணக்கில் உங்களுக்கு விடுதலை அளிக்கிறது. ஏனெனில், அதன் இணையற்ற 'தங்கிச்-செயல் புரியும் ஆற்றல்' நெடுங்காலம் நீடிக்கிறது.

**மிகுந்த சிக்கனம்!**

புதிய டால்ஃப் மிகவும் சிக்கனமானது. முதலில், இதற்காகும் செலவு மிக மிகக் குறைவு. இரண்டாவது, இது நெடுங்காலம் 'தங்கிச் செயல் புரிவதால்', பல வாரங்கள் வரை, நீங்கள் இதை மீண்டும் தெளிக்க வேண்டாம்!







புதிய 50 மி.லி. பேக்! ரூ. 2.47 மட்டுமே.

வரிகள் தனி

# டால்ஃப்®

மூட்டைப் பூச்சிகளின் தொல்லையிலிருந்து பூரண விடுதலை

பேயர் கெமிக்கல்ஸ் ஆராய்ச்சியின் நிரூபணமான தயாரிப்பு




OBM/6780 TM

மொழித் தேவியும் ஒரு தாதியும் வந்து தோணித் துறையின் அருகில் நின்றார்கள். அருள்மொழித்தேவி படகிலிருந்த சிவனடியாரை நோக்கிப் பக்தியுடன் கை கூப்பிக் கொண்டு நிற்பதைப் பொன்னன் பார்த்தான். உடனே சிவனடியாரை நோக்கி, ''சுவாமி! ஏதோ நான் தெரியாத்தனமாக உளறி விட்டேன்; அதையெல்லாம் மன்னிக்க வேண்டும்'' என்று உண்மையான பச்சாத்தாபத்துடனும் பக்தியுடனும் கூறினான்.

## அத்தியாயம் 12

# ராணியின் துயரம்

சிவனடியார் படகிலிருந்து இறங்கியதும் அருள்மொழி அவரை நமஸ்கரித்து விட்டு நிமிர்ந்து பார்த்தாள். அவளுடைய கண்களில் நீர் ததும்பிற்று.

''சுவாமி! விக்கிரமன் எங்கே?'' என்று சோகம் நிறைந்த குரலில் அவள் கதறி விம்மியபோது, சிவனடியாருக்கு மெய்சிலிர்த்தது. பொன்னன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். மரங்களின் மீதிருந்த பறவை இனங்களும் அந்தச் சோகக் குரலைக் கேட்கச் சகிக்காதவை போல் சிறகுகளை அடித்துக் கொண்டு பறந்து சென்றன.

''அருள்மொழி! இது என்ன பைத்தியம்? உன்னுடைய பதி உனக்கு என்ன சொல்லிவிட்டுப் போனார்? நீ வீரத் தாயாக இருக்க வேண்டும் என்று அவர் சொன்ன கடைசி வார்த்தையை மறந்து விட்டாயா? இப்படியும் தைரியத்தை இழக்கலாமா? வா, அரண்மனைக்குப் போய்ச் சாவகாசமாகப் பேசலாம்'' என்றார் சிவனடியார்.

மாஞ்சோலைக்கிடையே அமைந்திருந்த அழகிய பாதை வழியாக எல்லோரும் வசந்த மாளிகைக்குப் போய்ச் சேர்ந்தார்கள். ஒரு காலத்தில் எவ்வளவோ குதூகலமும் கொண்டாட்டமுமாயிருந்த அந்த வசந்த மாளிகை இப்போது பொலிவிழந்து சூனியமாகக் காணப்பட்டது. அரண்மனை ஊழியர்களின் முகங்களும் களையின்றிச் சோகம் நிறைந்து தோன்றின.

மாளிகை முன் மண்டபத்திலே புலித்தோல் விரித்திருந்த உயரமான பீடத்தில் சிவனடியார் அமர்ந்தார். அருள்மொழி கீழே வெறுந் தரையில் உட்கார்ந்தாள்.

''அம்மா! உன் மனத்தைக் கலங்க விடக் கூடாது....'' என்று சிவனடியார் ஆரம்பித்தபோது, அருள்மொழி அவரைத் தடுத்துத் துக்கம் பொங்கும் குரலில் கூறினாள்:

''ஐயோ! மனத்தைக் கலங்க விடக் கூடாது என்கிறீர்களே? மனத்தைத் தான் நான் கல்லாகச் செய்து கொண்டு விட்டேனே? என் தேகம் அல்லவா கலங்குகிறது? குழந்தையை நினைத்தால் வயிறு பகீரென்கிறதே! குடல் எல்லாம் நோகிறதே! நெஞ்சை முறுக்கிப் பிழிவது போல் இருக்கிறதே! நான் என்ன செய்வேன்? — சுவாமி! விக்கிரமனைக் காப்பாற்றுகிறேன் என்று வாக்குக் கொடுத்தீர்களே, அந்த வாக்கை நிறைவேற்றினீர்களா?''

''ஏன் நிறைவேற்றவில்லை, அருள்மொழி? நிறைவேற்றித்தான் இருக்கிறேன். விக்கிரமனுடைய உயிரைக் காப்பாற்றுவதாக உனக்கு வாக்குக் கொடுத்தேன். அவனுடைய உயிரைக் காப்பாற்றித்தான் இருக்கிறேன். விக்கிரமனை வீர மகனாகச் செய்வதாக அவனுடைய தந்தைக்கு வாக்களித்திருந்தேன். அதையும் நிறைவேற்றியே இருக்கிறேன். அம்மா! நீ மட்டும் அன்று காஞ்சியில் பல்லவ சக்கரவர்த்தியின் நீதி சபையில் இருந்திருந்தாயானால் உடல் பூரித்திருப்பாய்! பொய்யாமொழிப் பெருமான்,

'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக் கேட்ட தாய்'

என்று சொன்னது உன் விஷயத்தில் மட்டும் பொய்யாகப் போகுமா? சக்கரவர்த்தி எவ்வளவோ நல்ல வார்த்தை சொன்னார் விக்கிரமனுக்கு: 'பல்லவ சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிக் கப்பம் கட்டிக் கொண்டு வருவதாயிருந்தால், உன்னுடைய துரோகத்தை மன்னித்துச் சோழ நாட்டுக்கும் பட்டம் கட்டுகிறேன்!'' என்றார். விக்கிரமன் அணுவளவாவது மனம் சலிக்க வேண்டுமே? மலையைப் போல் அசையாமல் நின்றான். அது மட்டுமா? சக்கரவர்த்தியையே தன்னுடன் சண்டைக்கு அழைத்தான். 'நீர் வீரன் என்பது உண்மையானால், என்னுடன் வாட் போர் செய்ய வாரும்; என்னை ஜெயித்துவிட்டுப் பிறகு கப்பம் கேளும்' என்றான். அவனுடைய கண்களிலேதான் அப்போது எப்படித் தீப்



பள்ளிக்கூடம் விடுமுறை விட்டதும் குழந்தையை எழுதும் படிக்கச் சொல்லி எவ்வளவோ முயன்று பார்த்தார் தந்தை. ஜம்பம் சாயவில்லை.

ஒரு யுக்தி. 'விளையாட்டாக நடத்திப் பார்த்தால் என்ன?' வகுப்பறை உபாத்தியாயராகத் தம்மை எண்ணிக்கொண்டு எதிரே பல குழந்தைகள் இருப்பதாகப் பாவித்து, 'டிக்டேஷன்' கொடுக்க ஆரம்பித்தார்.

''என்னப்பா சொல்லிண்டிருக்கே?'' என்று கேட்டபடி அருகில் வந்தான் மகன்.

''இந்தப் பசங்களெல்லாம் டிக்டேஷன் எழுதறா. நன்றா எழுதுகிறவர்களுக்கு மிட்டாய் தரப் போகிறேன்!'' என்றார் தந்தை.

''இதோ வந்து விட்டேன்'' என்று கூறிச் சென்றான் அவன் மகன். சிலேட்டுப் பலப்பத்துடன் வருவான் என்று தந்தை எதிர்பார்த்திருக்கும்போது, ஓர் அடி ஸ்கேலுடன் வந்தான் குழந்தை. ''காப்பி அடிக்கிறவாளை நான் நாலு சாத்துச் சாத்தறேன்'' என்று விளையாட்டில் சேர்ந்து கொண்டான். -'ஜே'

பொறி பறந்தது? அருள்மொழி, அதைப் பார்க்க நான் கொடுத்து வைத்திருந்தேன்; நீதான் அந்தப் பாக்கியத்தைச் செய்யவில்லை.''

ஆவலினால் விரிந்த கண்களில் கண்ணீர் ததும்ப மேற்கூறிய விவரத்தைக் கேட்டுக் கொண்டிருந்த அருள்மொழி கூறினாள் : ''நான் பாக்கியமற்றவள் தான் ; அதற்கும் சந்தேகமா? பதியைப் போர்க்களத்தில் பலி கொடுத்து விட்டு இந்த உயிரை வைத்துக் கொண்டிருந்தேன். மகன் தேசப் பிரஷ்டனாகிக் கண் காணாத தேசத்துக்குப் போன பிறகும் உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேன். சுவாமி ! பல்லவ சக்கரவர்த்தி உறையூருக்கு வரப் போகிறார் என்று சொல்லுகிறார்களே, அது உண்மையா ? அப்படி வந்தால், அவர் காலில் விழுந்து, 'என்னையும் விக்கிரமனை அனுப்பிய இடத்துக்கே அனுப்பி விடுங்கள்!' என்று வேண்டிக் கொள்ளப் போகிறேன்.....''

'' என்ன சொன்னாய், அருள்மொழி! அழகுதான்! உன் புருஷனுடைய ஜன்ம சத்துருவின் காலில் விழுந்தா கெஞ்சுவாய் ! வீர சொர்க்கத்தில் இருக்கும் பார்த்திப மகாராஜா இதை அறிந்தால் சந்தோஷப் படுவாரா ? யோசித்துப் பார் !''

''ஆமாம்; அவர் சந்தோஷப்படமாட்டார் ; நானும் அவருடைய சத்துருவிடம் பிச்சை கேட்கப் போகமாட்டேன் ! ஏதோ ஆத்திரப்பட்டுச் சொல்லி விட்டேன். ஆகா அவர்தான் என்னவெல்லாம் ஆகாசக் கோட்டை கட்டினார். கன்னியாகுமரியிலிருந்து இமய பர்வதம் வரையில் புலிக்கொடி பறக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாரே! அவருடைய பிள்ளைக்கு இந்தப் பெரிய தேசத்தில் இருக்கவும் இடமில்லாமல் போய்விட்டதே !....''

'' பார்த்திப மகாராஜா வேறொரு மனக் கோட்டையும் கட்டவில்லையா, அம்மா ? சோழ ராஜ்யம் கடல்களுக்கு அப்பால் உள்ள தேசங்களிலும் பரவ வேண்டும் என்று அவர் ஆசைப்படவில்லையா ? இரகசிய சித்திர மண்டபத்தில் அவர் எழுதியிருக்கும் சித்திரங்களைக் கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொள்.''

'' ஐயோ ! அவருடைய ஆசை இம்மாதிரியா நிறைவேற வேண்டும் ? விக்கிரமன் இன்று கடல்களுக்கப்பால் உள்ள இராஜ்யங்களைப் பிடிப்பதற்காகப் படையெடுத்தா போய் இருக்கிறான் ? எந்தக் காட்டு மிராண்டித் தீவில் கொண்டு போய் அவனை விட்டிருக்கிறார்களோ ? காட்டிலும் மலையிலும் எப்படி அலைந்து கஷ்டப்படுகிறானோ ? ஏன் என்னை ஏமாற்றப் பார்க்கிறீர்கள், சுவாமி !''

''உன்னை நான் ஒருநாளும் ஏமாற்ற மாட்டேன், அம்மா! உன்னை ஏமாற்றி எனக்கு என்ன காரியம் ஆகவேண்டும் ? உன் மகனுக்கு ஒரு குறைவும் வராது என்பது என் நம்பிக்கை. விக்கிரமனுக்கு முன்னால் யாரும் தேசப் பிரஷ்டராகிக் காட்டுக்குப் போனதில்லையா ? இராமர் போகவில்லையா ? பஞ்ச பாண்டவர்கள் போகவில்லையா? விக்கிரமன் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளில் அனுபவிக்கும் கஷ்டங்கள் எல்லாம் அவனுடைய வீர பராக்கிரமங்களை இன்னும் அதிகமாக வளர்க்கும் ! திரும்பித் தாய்நாட்டுக்கு அவன் வரும் போது....''

'' ஐயோ! அவன் வர வேண்டாம், சுவாமி, வரவேண்டாம். தாய்நாட்டில் காலடி வைத்தால் சிரசாக்கினை என்று தான் சக்கரவர்த்தி விதித்திருக்கிறாரே ? எங்கேயாவது கண் காணாத தேசத்திலாவது அவன் உயிரை வைத்துக்கொண்டிருக்கட்டும்; அதுவே போதும்!'' என்றாள் அருள்மொழி.

''ஆனால், அப்படி அவன் வராமல் இருக்க முடியாது, அருள்மொழி! என்றைக்காவது ஒருநாள் அவன் வந்து தான் தீருவான். தாயின் பாசமும் தாய்நாட்டின் பாசமும் அவனைக் கவர்ந்து இழுக்கும். இந்த இரண்டு பாசங்களைக் காட்டிலும் வலிமை

பொருந்திய இன்னொரு பாசமும் சேர்ந்திருக்கிறது. உனக்கு அது தெரிந்திருக்க நியாயம் இல்லை....'' என்று சொல்லிச் சிவனடியார் நிறுத்தினார்.

''என்ன சொல்லுகிறீர்கள், சுவாமி!''

''ஆமாம்; தாயின் அன்பையும் தாய் நாட்டுப் பற்றையும் காட்டிலும் பெரியதொரு சக்தியும் அவனைத் திரும்பவும் இத்தேசத்துக்கு வரும்படி இழுக்கும். அது ஓர் இளம் பெண்ணின் கருவிழிகளிலுள்ள காந்த சக்திதான். அம்மா! நான் இன்று பற்றை அறுத்த துறவியானாலும் பூர்வாசிரமத்தில் ஸ்திரீ—பிரேமையினால் ஏற்படும் இன்ப துன்பங்களை அறிந்தவன்...''

''இது என்ன, சுவாமி! நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லையே? விக்கிரமனுக்கும் ஸ்திரீ பிரேமைக்கும் என்ன சம்பந்தம்?'' என்று வியப்புடன் கேட்டாள் அருள்மொழி.

சிவனடியார் புன்னகையுடன் கூறினார்:

''ஒவ்வொரு தாயும் தன் மகனைப் பற்றி இப்படித்தான் வெகு காலம் எண்ணிக் கொண்டிருக்கிறாள். கடைசியில் நேருக்கு நேர் உண்மையைக் காணும்போது திடுக்கிடுகிறாள். நீயாவது முன்னாலேயே தெரிந்து கொள், அம்மா! உன் மகன் விக்கிரமன் காஞ்சி நகரின் வீதியில் ஒரு கன்னியைச் சந்தித்தான். அவனைக் குறுக்கும் நெடுக்குமாய்ச் சங்கிலியால் பிணித்துக் குதிரை மீது கட்டிக் கொண்டு போன போதுதான் அந்தச் சந்திப்பு ஏற்பட்டது. அந்த நிலையிலேயே அந்தப் பெண்ணும் தன்னுடைய உள்ளத்தை அவனுக்குப் பறி கொடுத்துவிட்டாள். இது நான் கேட்டும் பார்த்தும் அறிந்த விஷயம். ஆனால் நேரில் நானே ஓர் அதிசயத்தைப் பார்த்தேன். மாமல்லபுரத்துக் கடற்கரையில் விக்கிரமனை ஏற்றிச் சென்ற கப்பல் கிளம்பக் கரையோரமாய்ச் செல்ல ஆரம்பித்த சமயத்தில் அந்தப் பெண் காஞ்சியிலிருந்து ஓடோடியும் வந்து சேர்ந்தாள். மறுபடியும் அவர்களுடைய கண்கள் சந்தித்தன! உள்ளங்கள் பேசிக் கொண்டன. காதலும் கனிவும் ததும்பிய அந்தப் பெண்ணின் விசால நயனங்களை விக்கிரமனால் ஒரு நாளும் மறக்க முடியாது. இரவிலும், பகலிலும், விழித்திருக்கும் நிலையிலும் தூக்கத்திலே கனவிலும், அந்தப் பெண்ணின் மதிவதனம் அவன் முன்னால் தோன்றிக் கொண்டுதான் இருக்கும். எங்கே இருந்து எந்தத் தொழில் செய்தாலும், எத்தகைய இன்ப துன்பங்களை அனுபவித்தாலும் விக்கிரமன் அந்தப் பெண்ணை மறக்கமாட்டான். என்றைக்காவது ஒருநாள் அவளைப் பார்க்கும் ஆசையுடன் அவன் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்தே தீருவான்.''

இத்தனை நேரமும் திகைத்து உட்கார்ந்து கொண்டிருந்த அருள்மொழி, ''ஐயோ! எனக்கு மிஞ்சியிருந்த செல்வமெல்லாம் என் பிள்ளையின் அன்பு ஒன்றுதான். அதற்கும் ஆபத்து வந்துவிட்டதா? அந்தப் பெண் யார், சுவாமி?'' என்று தீனக் குரலில் கேட்டாள்.

''பல்லவ சக்கரவர்த்தியின் மகள் குந்தவி.''

''ஆகா? என் பதியினுடைய பரம சத்துருவின் மகளா? சுவாமி! என்னமோ செய்கிறதே! தலையைச் சுற்றுகிறதே!'' என்றாள் அருள்மொழி.

அடுத்த கணம் தரையில் மூர்ச்சித்து விழுந்தாள். (தொடரும்)


பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதிக்காக

இந்தியா டுபாக்கோ கம்பெனி சங்கீத சம்மேளனம் 1976

சங்கீத கலாநிதி

எம். எஸ். சுப்புலக்ஷ்மி — பாட்டு

கண்டதேவி அழகர்சாமி — வயலின்

டி. கே. மூர்த்தி — மிருதங்கம்

நாகராஜ ராவ் — கடம்

7—11—76 ஞாயிற்றுக்கிழமை மாலை 6-30 மணிக்கு

புது தில்லி

விட்டல் ரோடிலுள்ள 'கமானி ஹாலில்'



# விமோசனங்கள்

அறிமுக எழுத்தாளர்:
இரா. பகவானந்ததாசன்

தான் பாவம் செய்துவிட்டதாக இப்போதுதான் உணருகிறாள் பார்வதி. இந்த உணர்வு ஏற்பட எந்த நிகழ்ச்சியும் காரணமாக இருக்கவில்லை.

அந்த அன்பான கணவன் ரகுராமனுக்கும், பார்வதிக்கும் ஒரு வித்தியாசமான ஒற்றுமை உண்டு. அவன் ஒரு 'விடோயர்', அவள் ஒரு 'விடோ'. இருவரும் மணப் பிணைப்புக்கு உள்ளாகுமுன்பே, ஒரு மனைவியுடனும், ஒரு கணவனுடனும் சொற்ப காலம் முறையான இல்வாழ்க்கை வாழ்ந்தவர்கள்.

பார்வதியிவிடம் அநுதாபம் கொண்டு ரகுராமன் அன்பு செலுத்துவதைப் போல், அவளால் அவனிடம் ஒரு பிரதிபலிப்பாக வேனும் அன்பு காட்ட முடியவில்லை. எனினும் அவனது அன்பைப் புறக்கணிப்பதுமில்லை.

அன்புற்ற மனைவியை இழந்த ஒரு கணவனின் வருத்தங்களைவிடக் காதலித்து மணந்து கொண்ட கணவனை இழந்த ஓர் இளம் விதவையின் துயரங்கள் அதிகமானவை என்பது அவனுக்குத் தெரியும். அதனால் தான், இந்தப் பார்வதியைவிட அழகான தன் மனைவியைத் தாமதமான கர்ப்பச் சிதைவில் பறிகொடுத்திருந்த துயரத்தைச் சிறிதும் காட்டிக் கொள்ளாமல் – அப்படிக் காட்டிக் கொண்டால் – 'விதவையான தன்னை மணக்க நேர்ந்ததை எண்ணி வருந்துகிறாரோ' என்பதாக இவள் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடுமே என்ற சரியான முன்யோசனையோடு– காதலித்து மணந்து கொண்ட ஒருத்தியோடு வாழ்வது போலவே பார்வதியோடு வாழ்வைத் தொடங்கினான் ரகுராமன்.



பார்வதி தன் முதல் கணவனை மறப்பதிருக்கட்டும். முன் எப்போதையும்விட இப்போது தான் அவனை அதிகமாக நினைக்கிறாள். ஏனெனில், அவனோடு ஒப்பிட்டு எண்ணிக் கொள்ள இப்போது ரகுராமன் இருக்கிறான். இந்த ரகுராமனோடு நிகழும் ஒவ்வொரு சம்பவத்தின் போதும் — இவ்வித சந்தர்ப்பங்களில் அவன் எப்படி நடந்து கொண்டான் — நடந்து கொள்வான் என்கிற ஒப்பீடல் அவள் விரும்பாமலே நினைவில் தோன்றுகிறது. சொல்லப்போனால், அவன் விதவையாக வாழ்ந்திருந்தால்கூட இப்போதளவுக்கு அவனை நினைத்துக் கொண்டிருக்கமாட்டாள். இவனோடு அவனை ஒப்பிடுகையில் அவனே உயர்ந்தவனாகத் தோன்றுகிறான். ஆனால், அவன் இவனளவு பணக்காரனில்லை; உயர்ந்த உத்தியோகஸ்தனும் இல்லை; இவனளவு பிரியமாக நடந்து கொண்டவனும் இல்லை. அவர்களின் ஒரு வருஷத் தாம்பத்தியத்தில் சில பிணக்குகள் கூடத் தோன்றியதுண்டு. ஒரு முறை அவன்




அவளை அடித்தும் இருக்கிறான். எனினும், அவன் அவளைக் காதலித்துமணந்து கொண்ட முதல் கணவன் என்பது ஒன்றே அவனை உயர்ந்தவனாக எண்ண வைத்தது.

ரகுராமனின் அன்பு தன்னை மகிழ்விப்பதற்காக அவன் ஏற்றுக் கொண்டிருக்கிற வேஷம் என்றே அவள் உணர்ந்து கொண்டிருந்தாள்.

சத்தியமூர்த்தியைக் காதலித்ததும், மணந்து கொண்டதும், அவனோடு வாழ்ந்ததும்... எந்த ஜென்மத்திலும் மறக்க முடியாத இனிய நினைவுகள் அவை.

பார்வதியின் அண்ணன் சிவசங்கரனோடு உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராய்ப் பணியாற்றி வந்தான் சத்தியமூர்த்தி. அவனுடைய லட்சிய வாதங்கள், தமிழிலக்கியங்களில் அவனுக்கிருந்த ஈடுபாடு, கவியரங்கங்களில் அவனது நேர்த்தியான பங்கேற்புகள் இவற்றால் சிவசங்கரன் பெரிதும் கவரப்பட்டான். 'புதுமை விரும்பி'யான சிவசங்கரன் சத்தியமூர்த்தியை உயிர்த் தோழனாக்கிக் கொண்டான்.

சிவசங்கரனின் தந்தை அவனை வீட்டில் தங்க வைப்பதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார். 'வயது வந்த பெண் பார்வதி வீட்டில் இருக்கிறாள்' என்னும் நியாயம் அவர் எதிர்ப்பில் இருந்தும்கூட, இயற்கையாகவே இருக்கும் பிடிவாத குணம் சிவசங்கரனுக்கே வெற்றியாயிற்று.

சத்தியமூர்த்தியின் அமைதி, பருவப் பெண்ணனை தன்னை ஏறெடுத்தும் பாராத ஒழுக்கம் இவை பார்வதியின் நெஞ்சில் காதலைத் தோற்றுவித்தன.

ஆறு மாதங்களுக்குப் பிறகு அவனுக்கு 'டைஃபாய்ட்' ஜுரம் வந்தது. அந்த வீட்டில் பார்வதி மட்டுமே பெண். அவள் தாய் முன்பே இறந்திருந்தாள். அவனுக்குச் செய்ய வேண்டிய சிசுருஷைகளைப் பார்வதி செய்ய வேண்டிய நிலை வந்தபோதும், அவள் தந்தை சிவசங்கரனிடம் எதிர்ப்புக் குரல் கொடுத்தார்.

'என்னப்பா பெரிய உலகம்? இந்த உலகம் அப்படி ஏதாவது சொன்னால், பார்வதியை அவனுக்கே கொடுத்து விடலாம். அவன் உயிரைப் பற்றிப் பயந்து கொண்டிருக்கும் போது இந்த உலகத்தைப் பற்றிப் பயப்பட முடியாது' என்று அவர் எதிர்ப்பை முறியடித்தான் சிவசங்கரன்.

அந்தத் தைரியத்தில் பார்வதி எந்த நேரமும் சத்தியமூர்த்தியின் அருகிலேயே இருந்து அவனுக்குப் பணிவிடைகள் செய்து கொண்டும், தன் மனத்தை அவனிடம் பறிகொடுத்துக் கொண்டுமிருந்தாள்.

அவன் கொஞ்சம் சுகமுற்றபோது ஒரு சமயம் அவன் எழுதின கவிதைத் தொகுப்புச் சுவடியைக் கையில் வைத்துக் கொண்டு நின்றாள்.

''அதையெல்லாம் படிச்சியா?'' என்று அப்போது கேட்டான்.

''ஊம்.''



## ஹிப்பி ஹாஸ்யம்–1

ஒரு ஹிப்பியின் எடை இருநூறு பவுண்ட் இருந்தது. திடீரென்று நூறு பவுண்ட் குறைந்து விட்டது. காரணம் அவன் குளித்ததுதான்!

•

''உனக்குக் கவிதைகள் பிடிக்குமா?''

''ஊம்.''

''எங்கே, அதிலிருந்து ஒரு கவிதை சொல்! உன் ரசனை எப்படி இருக்கு, பார்க்கலாம்?''

''ம்ஹூம். சொன்னா உங்களுக்குக் கோபம் வரும். என்னைத் தப்பா நெனைப்பீங்க'' என்று நாணினாள்.

''அப்படியெல்லாம் நினைக்க மாட்டேன். நீ என் கவிதையைத்தானே சொல்லப் போறே? சொல்! ... ம்!''

பார்வதி அப்போது அவனைப் பார்க்க வெட்கப்பட்டாள். கண்களை மூடிக்கொண்டு மெல்ல இதழ் திறந்து மிகுந்த உணர்ச்சியோடு அவனுடைய கவிதையைச் சொன்னாள்:

'' நீயற்றுப் போனால் நினைவற்றுப் போகுமடி!<br>
காயற்றுப் போனால் கனியுண்டோ—<br>
நோயுற்(று)<br>
உருக்குலைந்த போதும் உயிர்வாழ்ந்தேன்<br>
இன்றே<br>
நெருப்பாகிப் போனாயே நீ.''

சத்தியமூர்த்தி கொஞ்ச நேரம் மௌனமாயிருந்தான். பார்வதி தன்னைக் காதலிக்கிறாள் என்பதை அப்போதுதான் முற்றிலுமாக உணர்ந்து கொண்டான். அந்தக் காதல் சரிதானா, சாத்தியம்தானா என்றெல்லாம் பலமுறை யோசிக்கச் சொன்னான். அவள் தீர்மானமாகச் சொல்லிய பிறகே தன் காதலை வெளிப்படுத்தினான்.

சிவசங்கரன் முழு மனத்தோடு சம்மதித்தான். அவன் தந்தை ஜாதியைச் சுட்டித் தம் எதிர்ப்பைத் தெரிவித்தார்.

''இந்தக் காலத்தில் ஜாதிப் பிரச்னையைக் கிளப்புவது குற்றம்'' என்று கூறி அவர் எதிர்ப்பை முறியடித்து, சத்தியமூர்த்திக்கும் பார்வதிக்கும் திருமணம் செய்து வைத்தான் சிவசங்கரன்.

அந்த இல்லறத்தின் ஒரு வருஷ முடிவில் அவள் விதவையாகிப் போனாள். பள்ளியிலிருந்து சைக்கிளில் வீடு திரும்பிக்கொண்டிருந்தபோது, பஸ் மோதிச் சத்தியமூர்த்தி ஸ்தலத்திலேயே மாண்டு போனான். தன் காதல் வாழ்வு அற்பாயுளில் முடிந்து போன சோகத்தில் பார்வதி இடிந்துபோனாள்.

தாளமுடியாத சோகத்தில் சிவசங்கரன் சோர்ந்துபோனான். ''தாழ்ந்த ஜாதிக்காரனுக்குப் பெண்ணைக் கொடுத்தே. ஜாதகம் பார்க்காமே கல்யாணம் செய்து வைச்சே, அது தெய்வத்துக்கே பொறுக்கலேடா'' என்று தலையில் அடித்துக் கொண்டு அழுதார் தந்தை.

ஒன்றரை வருஷம் சோகமாய் கரைந்தது. தங்கைக்குப் புனர்வாழ்வு அளிக்க வேண்டும் என்ற எண்ணம் சிவசங்கரனின் மனத்தில் தலையெடுக்க ஆரம்பித்தது. 'இருபது வயதுக்குள் அந்த இளம் பூங்கொடி வாடிப் போவதா' என்று வருந்த ஆரம்பித்தான்.

செய்தித் தாள்களில் அப்போது ஒரு விளம்பரம் வந்திருந்தது. 'மனைவியை இழந்த தனக்கு இரண்டாம்தாரமாக மணந்து கொள்ள ஓர் இளம் விதவை தேவை' என்று விளம்பரம் கொடுத்திருந்தான் ரகுராமன்.

தங்கைக்கும், தந்தைக்கும் தெரியாமல் ரகுராமனைக் கண்டு பேசினான். ரகுராமனைத் தவிர வேறொரு சிறந்த வரன் அமைய முடியாது என்று அவனுக்குத் திருப்தி ஏற்பட்டது. பார்வதியைப் பற்றிய முழு விவரங்களைக் கேட்டு ரகுராமனுக்கும் திருப்தி ஏற்பட்டது. சிவசங்கரன் சம்மதித்துவிட்டுத் திரும்பினான்.

தன் முடிவைத் தந்தையிடமும் தங்கையிடமும் தெரிவித்தான். 'தம் குலத்தில் எந்த விதவைக்கும் மறுமணம் செய்வித்ததில்லை' என்று உரத்த குரலில் எதிர்ப்புத் தெரிவித்தார் தந்தை. காதைப் பொத்திக் கொண்டு கலங்கினாள் பார்வதி.

ஆனால், எந்தச் சீர்திருத்த உணர்வு பார்வதிக்கும் சத்தியமூர்த்திக்கும் கலப்புத் திருமணம் செய்து வைத்ததோ, அதுவே பார்வதிக்கும் ரகுராமனுக்கும் மறுமணம் செய்து வைத்துவிட்டது.

ஒவ்வொரு முறை நிலைக்கண்ணாடி முன் நின்று தன் மஞ்சள் முகத்தில் பொட்டிட்டுக் கொள்ளும்போதும், பூச்சூடும்போதும், சுமங்கலிப் புடவை தரித்துக் கொள்ளும்போதும் அவள் கையும் மனமும் பதறின. இந்தத் தாலியைக் கண்களில் ஒத்திக் கொள்ளவே அஞ்சினாள். தன் இதயத்துக்குள் இன்னமும் ஒரு விதவை உருவத்தில்தான் அவள் பதிந்திருந்தாள்.

மாலையில் ரகுராமன் அலுவலகத்திலிருந்து திரும்பி வருவதற்கு முன்பே பார்வதி தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

கொஞ்ச தூரத்தில் வரும்போதே ரகுராமன் மூன்று முறை ஹாரன் ஒலிப்பது வழக்கம். இதோ ஹாரன் மூன்று முறை ஒலித்தது. பார்வதி அவனை வரவேற்க வாசலுக்கு விரைந்தாள்.

அந்தச் சியாமளநிற 'ஸ்டாண்டர்ட்' கார் மெதுவாக வளைந்து வந்து வாசலில் நின்றது. என்றுமில்லாமல் அவள் வந்து காத்திருப்பதில் மகிழ்ச்சியுற்று, ''பாரு!'' என்று கொஞ்சினான் ரகுராமன். தோளில் கை வைத்து மாடிக்கு அழைத்துச் சென்றான்.



## ஹிப்பி ஹாஸ்யம்-2

இரண்டு ஹிப்பிகளிடையே நடந்த சம்பாஷணை: ''எப்படி இன்றைக்கு நீ இத்தனை பணம் சம்பாதித்தாய் ?''

''பாடிச் சம்பாதித்தேன்''

''உன் குரல் சகிக்காதே ! எப்படி இவ்வளவு கொடுத்தார்கள் பாடியதற்காக ?''

''நிறுத்தியதற்காகக் கொடுத்தார்கள் !''

தேர்ந்தெடுங்கள் இதோ, புதுமையாக மலரும்
கோலாகல டிசைன்களின் வரிசை.



கட்டாவ்
டெரிகோஸா சேலைகள்
'டெரீன்'

Creative Unit-A 2427-Tam.

"நேர்த்தியாக மணக்கும்
லியூர் ஷாம்பூ
நேரமெல்லாம் மணக்கும்
அவர் நெஞ்சிலே"

என்கிறார் அனிதா ராபின்ஸ்—எக்ஸ்போர்ட் ஹவுஸ் நிர்வாகி,



நாலு வகையான புதிய லியூர் ஷாம்பூவிலே எதை எடுத்தாலும் அதற்குத் தனிமணம் உண்டு. சிகை எந்த வகையானாலும் சீராட்டும் அருமையிலே, ஆகா. உங்கள் துணைவர் மனம் உங்கள் கூந்தலிலே சரணம்—தலைக்கேற்றிய உன்னதப் புதுமணம்.

என் கேசத்திற்கு வசீகரமூட்டுது லியூர். சுகந்தமான சுத்தமுடன் அதை சொகுசாக வைத்திருக்குது லியூர் ஷாம்பூ.




Creative Unit-A 2352 -Tam

''ட்ரஸ் சேஞ்ச் பண்ணிக் கொண்டு சீக்கிரம் வாங்க டிஃபன் ஆறிடும்!''

ரகுராமன் ஆச்சரியப்பட்டுப் போனான். அவளோடு வாழ்க்கை தொடங்கியதிலிருந்து இன்றுதான் முதன் முதலாக அவளாகவே அழைத்தாள். மகிழ்ச்சி தாளாமல் முற்றிலும் குதூகலமான வாழ்க்கை இந்த நிமிஷத்திலிருந்துதான் உண்மையில் தொடங்குகிறது என்பதாக உணர்ந்து, அவள் இடுப்பை வளைத்துப் பிடித்துச் சற்று உயரே தூக்கி ஒரு சுற்றுச் சுற்றி இறக்கி விட்டு, ''எங்கே போகலாம்?'' என்று விளையாட்டுப் பிள்ளை போல் அவசரப்பட்டான்.

'ஐயோ, இவர் இப்படி மகிழ்ந்து போகிறாரே! இந்த மகிழ்ச்சி அடியோடு அழிந்து போகும் வண்ணம் நான் இவரிடம் எப்படி என் கருத்தைச் சொல்லப் போகிறேன்' என்று தவித்துப் போனாள் பார்வதி.

''பீச்சுக்குப் போகலாம். முகம் தெரியாத இருட்டிலே போய்க் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருப்போம்'' என்று கூறியவாறு அவன் பிடியிலிருந்து தன்னை விலக்கிக் கொள்ள முயன்றாள் பார்வதி.

கார் 'பீச்'சுக்குச் சென்றதும் மெயின் ரோட்டிலிருந்து கீழே இறக்கி நிறுத்தினான். 'ட்ரான்ஸிஸ்டரை' விவித பாரதிக்குத் திருப்பினான். ஹிந்திப் பாடல் ஒலிக்கிறது. ஒரு ஸர்ப்பத்தின் பாதை போல் ஒரு நீண்ட வளைகோடு போல் வயலின் ஒலிகள் மென்மையாக நெளிந்தன. கண்களை மூடிக் கொண்டு இசையின் ஏற்ற இறக்கத்துக்கு இசைவாய் வலது கையை ஏற்றி இறக்கி ரசித்தான்.

ஓர் ஏழைச் சிறுவன் மூங்கில் தட்டில் 'பாப்கார்ன்' விற்றுக் கொண்டு போனான்.

''பாப்கார்ன் வேணுமா?''

''நோ. நீங்க வேணும்னு வாங்கிக்குங்க!''

அவன் சிரித்தான். ''உனக்கு 'நோ'ன்னா எனக்கும் 'நோ'தான்.''

பார்வதி கொஞ்ச நேரம் மௌனமானாள். அவனது மகிழ்ச்சிகளுக்குப் புறம்பாக எந்த வார்த்தைகளைக் கொண்டு ஆரம்பிப்பது என்று புரியாமல் தவித்தாள் அவள்.

''உனக்கு 'நோ'ன்னா எனக்கும் 'நோ'ன்னு சொல்றீங்களே? எல்லா விஷயத்துக்குமா?'' என்று எப்படியோ ஆரம்பித்தாள்.

''அஃப்கோர்ஸ்'' என்று சிரித்தபடி ஆமோதித்தான் அவன்.

தயங்கித் தயங்கி, ''எனக்கு உங்களையே பிடிக்கலேன்னா?''

''உனக்கு என்னைப் பிடிக்கலேன்னா எனக்கும் என்னைப் பிடிக்காமப் போயிடும். அதிருக்கட்டும். இப்ப நான் உன்னை ஒரு தடவை இறுக்கிப் பிடிச்சுக்கட்டுமா?'' என்று குழந்தையைப் போலக் குறும்பு செய்தான்.

'ம்ஹூம். இன்று இவரது மகிழ்ச்சிமயமான மனநிலையைச் சிதைத்து, தான் சொல்ல வந்திருக்கிற இடியை இவர் மேல் வீச முடியாது'—''வீட்டுக்குப் போகலாமா?'' என்று பின்வாங்க விரும்பினாள்.

''ஏன் பாரு அதுக்குள்ளே? இன்னும் 'ஸிக்ஸ்'கூட ஆகல்லே.''

## ஹிப்பி ஹாஸ்யம்–3



''நீ செய்த ஒரு தவறுக்காக உன் அப்பா உன்னை உதைக்கத் தேடிக்கொண்டிருக்கிறார். எங்காவது ஓடி ஒளிந்து கொள். எங்கே ஒளிந்து கொள்ளப் போகிறாய்?''

''சலூனில்! அங்கே தான் அவர் என்னைத் தேடமாட்டார்!''

---

''உங்ககிட்டே சில விஷயங்கள் பேசணும்னு வந்தேன். உங்களுக்கு இன்னைக்கு 'மூட்' சரியில்லே. இன்னொரு நாளைக்குச் சொல்றேன்.''

''நோ. நான் 'எவர்-மூட்'. யூ நோ. கமான் லே! உனக்கு என்ன வேணுமோ சொல்லு. உன் ஆசைகளையெல்லாம் சொல்லு! ஒவ்வொரு நாளும் நீ ஆயிரம் ஆசைகளை என்கிட்டே சொல்லணும். அதையெல்லாம் அப்பவே நான் பூர்த்தி செய்யணும். இதுதான் என் ஆசை. சொல்லு பாரு! கமான்!'' என்று உணர்ச்சி மயமானான் ரகுராமன்.

''காருக்குள் அமர்ந்திருப்பது வீட்டுக்குள் அமர்ந்திருப்பது போலவே தோன்றுகிறது. கொஞ்ச தூரம் நடக்கலாமே?''

''ஓ... எஸ்!''

அலையோரத்துக்குச் சென்றார்கள். இன்று கூட்டம் அதிகமில்லை.

''உட்காருங்களேன்!'' — அமர்ந்தார்கள்.

''உங்களுக்கு உண்மையான மனைவியாக என்னாலே வாழ முடியலேங்க.''

''பாரு!...நீ... என்ன சொல்றே?''

அவனை அவளால் பார்க்க முடியாமல், ''இன்னும் என்னாலே அவரை மறக்க முடியலேங்க'' என்று தலை குனிந்தாள்.

அவன் செயலிழந்தவனாக அவளை உற்று நோக்கினான்.

அவள் தொடர்ந்து பேசினாள். ''நீங்க ஆஃபீசுக்குப் போனதும் தினமும் அவரும் நானும் சேர்ந்திருக்கிற கல்யாண ஃபோட்டோவை எடுத்துப் பார்த்துக்கிட்டிருக்கேங்க. அதுதான் நிஜம்னு தோணுது. நாம ரெண்டு பேரும் சேர்ந்திருக்கிற படத்தைப் பார்த்தா, அது ஒரு நாடக 'ஸீன்' மாதிரி, பொய் மாதிரிதான் தோணுது.''

---

## ஹிப்பி ஹாஸ்யம்–4



வயதான ஹிப்பிகள் இருவர் ஒரு 'ஹிப்பி காலனி'யில் சந்தித்துக் கொண்டார்கள். ஒருவர் சொன்னார்: ''கஷ்டப்பட்டுச் சேர்த்து வைத்திருந்த லட்சம் ரூபாயை எவனோ அடித்துக் கொண்டு போய்விட்டான். அந்த விரக்தியில் தான் நான் ஹிப்பியானேன்.''

மற்றவர் சொன்னார்: ''அந்த லட்ச ரூபாயை அடித்தவன் நான்தான். அது கைக்கு வந்ததிலிருந்து நிம்மதி கெட்டுப் போய்த் தான் நான் ஹிப்பியானேன்!''

அவள் விபரீதமாகப் பேச ஆரம்பிக்கிறாள் என்றுணர்ந்து துடித்துப் போனான்; 'உங்களுக்கு உண்மையான மனைவியாய் வாழ முடியவில்லையே' என்று தன்னிடமே சொல்கிற அளவுக்கு அவள் நல்லவள் என்று மகிழ்ந்து போனான்.

''கொஞ்ச நாளைக்கு அப்படித்தான் இருக்கும். அப்புறம் அவரை மறந்துடலாம்.''

''என்னாலே முடியலேங்க. நான் பழைய படியே விதவையா இருக்கலாம்னு முடிவு பண்ணியிருக்கேன்'' என்று தீர்மானமாகச் சொல்லிக் கண் கலங்கினாள் அவள்.

''நானும் செத்துப் போயிடணும்கிறது தான் நீ சொல்றதுக்கு அர்த்தம்.''

''ஐயையோ! ஏன் இப்படி யெல்லாம் சொல்றீங்க?''

''பின்னே நீ எப்படி விதவையாவது?'' என்று தெளிவோடு ஒரு விவாதத்தைத் தொடங்கினான்.

''நான் செஞ்சுட்ட பாபத்துக்கு விமோசனம் தேடறதுக்காகத்தான் இப்படிச் சொல்றேன்.'' சிறிது மௌனத்துக்குப் பின், ''உங்க அம்மா ஒரு விதவையாகவே தொடர்ந்து வாழ்ந்ததில்தான் அவங்களுக்கு மதிப்பு. இல்லேன்னா, அவங்களை நீங்களே மதிச்சிருப்பீங்களா? அப்படி ஒரு மதிப்பு எனக்கும் வேணும்னு நான் ஆசைப்படறது எப்படித் தவறாகும்?''

''ஓ....?'' — ஒரு கணம் அவன் தடுமாறினான்.

''எங்க அம்மா ஓர் அம்மா. நீ யாருக்கும் அம்மா இல்லையே. குழந்தைகளை மறந்துட்டு மறு கல்யாணம் செய்து கொண்டால்தான் தப்பு. உனக்கு அப்படி இல்லையே?''

''நோ நோ! அவங்களும் பெண், நானும் ஒரு பெண்ணுங்கற முறையிலேதான் நீங்க யோசிக்கணும்.''

''அப்படியே யோசிச்சாக் கூட அவங்க காலம் வேறே. நம்ம காலம் வேறே. ஒரு காலத்துலே உடன்கட்டை ஏறுறது கூடத் தான் வழக்கமா இருந்தது. நீ உடன்கட்டை ஏறுனியா? ஏன்? காலம் மாறிக்கிட்டு வருது. இப்பல்லாம் மறு கல்யாணம் செஞ்சுக்கற துக்காகவே விவாகரத்து செஞ்சுக்கிறவங்க கூட இருக்காங்க. நீ ஒரு நூறு வருஷத்துக்கு முந்திப் பொறந்திருக்க வேண்டிய பாரு! என்னை உனக்குப் பிடிக்கல்லேன்னா நீ நேரடியாகவே சொல்லிடலாம். ஐ ஷெல் ரிலீவ் யூ.''

அவளுக்குச் சுருக்கென்று தைத்தது. ''இப்படி யெல்லாம் சொல்லி என் மனசைப் புண்படுத்தாதீங்க. ரெண்டாவது கல்யாணம் செஞ்சுக்கிட்டா ஒரு விதவையைத்தான் செஞ்சுக்குவேன்னு சொன்ன நல்லவரில்லையா நீங்க? இப்படி ஒரு நல்லவருக்கு 'ஃப்ரஷ் வைஃபா' இல்லையேன்னுதான் நான் வருத்தப்படறேன்.''

''யூ ஆர் ராங். நான் மட்டும் ஃப்ரஷ் ஹஸ்பெண்டா என்ன?'' அவன் சிரித்தான்.

''எனக்கென்னமோ நான் பாபம் செஞ்சுட்டதாகவும், என் மேலே ஏதோ சாபம் விழுந்துவிட்டதாகவும் பயமாயிருக்கு. அந்தப் பாவத்திலிருந்தும் சாபத்திலிருந்தும் நான் விமோசனம் அடைஞ்சாகணும்னு தோணுது. இல்லேன்னா என்னாலே நிம்மதியா வாழவே முடியாதுங்க'' என்று கண் கலங்கினாள்.

''நோ நோ. இதெல்லாம் வீண் பிரமை. நீ ரொம்ப நல்ல பெண்ணா இருக்கிறதனாலே உன் மனசிலே ஏற்படற அதிகப்படியான பயம். என்னை விட்டுப் போறேன்னு சொல்றது பாபமில்லையா? நான் கட்டின தாலியை அறுத்துக் கொடுத்து விட்டுப் போறேங்கறது எனக்கு நீ கொடுக்கிற சாபமில்லையா? நல்லா யோசிச்சுப் பார்! இன்னைக்கு எவ்வளவு லேட்டானாலும் பரவாயில்லை. இந்த விஷயத்தைக் கிளியர் பண்ணிட்டே வீட்டுக்குப் போகலாம்'' என இதமாகச் சொன்னான்.

நன்றாக இருள் கவிந்தது. அவள் விரும்பிய வண்ணமே ஒருவர் முக உணர்ச்சிகளை ஒருவர் பார்த்துக்கொள்ள முடியாத இருள்.

''அவர் இறந்து விட்டார். இப்ப அவர் இல்லே. இதை ஏன் திருப்பித் திருப்பிச் சொல்றேன்னு உனக்குப் புரியுதா? அதனாலே, அவருக்கோ, எனக்கோ நீ துரோகம் செய்யறேங்கற பேச்சுக்கே இடமில்லே. இன்னிக்கு நான் மாரடைப்பினாலே செத்து, நாளைக்கு நீ இன்னொருத்தனைக் கல்யாணம் செய்து கொண்டு, அவன் ஒரு நாள் செத்து, இன்னொருத்தனை நீ கல்யாணம் செஞ்சுக்கிட்டாக்கூட நான் அதைத் தப்பாச் சொல்ல மாட்டேன். கற்பு மனசுலே இருந்தாப் போதும். நீ இப்படிச் சொல்றியே, எல்லாரும் உயிரோட இருக்கிறப்பவே, திரௌபதி அஞ்சு கணவர்களோடு வாழலியா? அவளைக் கற்பரசின்னு நாம சொல்லலியா? கற்பு மனசுலே இருக்கணும்.''

அவள் மௌனமாக இருந்தாள்.

அவள் யோசனைக்கு இன்னும் சிலவற்றைச் சொல்ல நினைத்தான் அவன். ''நீ சொன்னியே பாவம், சாபம், விமோசனம் அடையணும்னு. அது இதுதான். நீ விதவையானது தான் பாவம், சாபம் எல்லாம். உனக்கு மறு மணம் நடந்ததுதான் விமோசனம்.''

பார்வதி அப்போதும் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் அவன் மார்பில் சாய்ந்து அவன் மார்பைத் தன் கண்ணீரால் ஈரப் படுத்தினாள்.

அவள் உண்மையில் விமோசனம் அடைந்து விட்டாளா? அந்தக் கண்ணீரின் அர்த்தம் என்ன?




**ஹிப்பி ஹாஸ்யம்-5**

விவாகரத்து வழக்கு ஒன்றின்போது கூண்டிலிருந்த ஹிப்பியை நீதிபதி கேட்டார்: ''உன் கணவனை நீ ஏன் விவாகரத்து செய்கிறாய்?''

''நான்தான் ஐயா கணவன்'' என்று பதில் வந்தது கூண்டிலிருந்து!

தொகுப்பு: கே. வி. எம்.



# டர்னர்

## வருகிறர் தயாராயிருங்கள்!

மாண்ட்ரீயால் ஒலிம்பிக்கில் யாரும் எதிர்பாராத அதிசயம் நிகழ்ந்தது! முதல் தடவையாக அத்தனை பேரும் மூக்கின் மேல் விரல் வைக்கும்படியாக நியூஸிலந்து கோஷ்டி ஹாக்கிப் பந்தயத்தில் தங்கப் பதக்கத்தைப் பெற்றது !

இந்த 'ஒலிம்பிக்' வெற்றி பெற்ற நியூஸிலந்து நாட்டிலிருந்து காப்டன் டர்னர் தலைமையில் இரிக்கெட் கோஷ்டி இந்தியாவுக்கு விஜயம் செய்கிறது !

காப்டன் டர்னர் உலக கிரிக்கெட் ஆட்டக்காரராக உருவாவதற்கு ஊக்கம் அளித்தவர் இபதுல்லா. இவர் நியூஸிலந்துக்குக் கிரிக்கெட் பயிற்சியாளராக வந்தபோது டர்னரின் ஆட்டம் இவரைக் கவர்ந்தது. டர்னர் இங்கிலாந்துக்கு விஜயம் செய்தால் தரமான ஆட்டக்காரராக மிளிரலாம் என்ற ஆசையை ஏற்படுத்தினர்.

ஒடாகோ பள்ளியில் காப்டன் எல்.ஸ்மித் கிரிக்கெட்டின் ஆரம்பக் கல்வியை டர்னருக்குத் தந்தார். நியூஸிலந்தின் தலைசிறந்த கிரிக்கெட் மன்னர் பெர்ட் ஸட்க்ளிப் அவருக்குப் பயிற்சி அளிப்பதில் மிகுந்த கவனம் செலுத்தினர்.

டர்னர் 1947ம் ஆண்டு மே 26ந் தேதி பிறந்தார். ஸ்கூல் காப்டனுக பிவரது ஐந்து சதங்கள் நினைவில் என்றும் நிற்பவை.

காப்டன் டர்னருக்கு 'மந்தகதியில் ஸ்கோர் செய்யும் பேர்வழி' என்ற அவப் பெயரும் உண்டு.



டர்னர் —
இளம் வயதில்

இங்கிலாந்து செல்லப் பணத்துக்காக ஒரு ரொட்டிக் கடையில் இரவுப் பணியாளராகப் பதின்மூன்று மாதங்கள் கடுமையாக உழைத்தார்.

பத்தொன்பது வயதில் பதின்மூன்றுயிரம் மைல் தூரத்தில் உள்ள அந்நிய தேசமான இங்கிலாந்துக்கு மிகுந்த கற்பனைக் கனவுகளுடன் புறப்பட்டுவிட்டார் டர்னர்.

அவருக்கு அங்கே பல சோதனைகள்! அத்தனையையும் அவர் தம் விளையாட்டுத் திறமை மிகுல் வென்றுர் !

1971ம் ஆண்டு 'விஸ்டன்' அந்த வருஷத்தின் ஐந்து கிரிக்கெட் மன்னர்களில் ஒருவராக டர்னரை வர்ணித்தது.

முதலில் 'டிபென்ஸ்' ஆட்டக்காரராக மிளிர்ந்து, அதிலிருந்து தலைசிறந்த 'ஸ்டிரோக் பிளேய'ராக உருவானூர்.

நியூஸிலந்து காப்டனுக டர்னர் கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு எதிராக 171 'நாட் அவுட்' ரன்களும், ஆஸ்திரேலியாவுக்கு எதிராக இரு செஞ்சுரிகளும், மேற்கிந்தியத் தீவு கோஷ்டிக்கெதிராக இரு சதங்களும், பாகிஸ்தானுக்கு எதிராக 110 ரன்களும், இந்தியாவுக்கு எதிராக 114 ரன்களும் எடுத்துத் தாம் உலக கிரிக்கெட் பாட்ஸ்மன் என்பதை நிரூபித்திருக்கிருர்.

டர்னர் இந்தியப் பெண்மணியை மணந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. டர்னருக்கு இந்திய உணவு வகைகளில் பிரியம் உண்டு என்கிருர் ஆர். பி. அழகண்ணன். இவர் நியூஸிலந்துக்கு இந்தியக் குழுவின் மானேஜராகச் சென்று வந்தவர்.

காப்டன் டர்னர் நன்ருக ஹாக்கியும் ஆடுவார்.

இங்கிலாந்தில் கௌண்டிப் பந்தயங்களில் ஆயிரம் ரன்கள் மே மாதத்தில் எடுப்பது என்பது அபூர்வ சாதனை. எட்ரிச் 1938ல் இந்தச் சாதனையைக் கண்டார். முப்பத்தைந்து வருஷங்களுக்குப் பிறகு நியூஸிலந்து காப்டன் டர்னர் இந்தச் சாதனையை இங்கிலாந்தில் நிறைவேற்றியது அபூர்வ விஷயம்.

காப்டன் டர்னர் தலைமையில் வரும் கிரிக்கெட் குழுவை வரவேற்கிறோம். —குண்டுமணி

சந்தர்: ஏங்க ! எம்.பி.பி.எஸ். படிப்பு ரொம்பக் கஷ்டமோ ?

சுந்தர்: ஆமாம் ! சேர்ந்தாப்பல ஐந்து வருஷம் படிக்கணுமே....!

சந்தர்: அதென்னங்க கஷ்டம். என் தம்பி எட்டாவது வகுப்பில் சேர்ந்தாப்பல ஐந்து வருஷம் படிச்சிருக்கானே !



சந்தர்: நேற்று இரவு 7.30 மணிக்கு நம்ம தெருவிலே அரை மணி நேரம் ஒரே சண்டை நடந்தது !

சுந்தர்: ஐயய்யோ ! அப்புறம் என்னுச்சு ?

சந்தர்: அப்புறம் இரவு மணி 8 ஆச்சு.

பிரகாஷ்

# கொடு சலுகை!

**வி**சித்திரபுரியின் கல்வியமைச்சர் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்தார். கண்களை மூடி மூடித் திறந்தார். என்ன செய்தும் பாழாய்ப் போன தூக்கம் வரவில்லை.

கட்டிலில் எழுந்து உட்கார்ந்து, தலைமாட்டில் இருந்த விளக்கைப் போட்டார் அமைச்சர். ஒரு காகிதத்தை எடுத்து வைத்துக் கொண்டு தாம் மறு நாள் என்ன வேலை செய்ய வேண்டும் என்று பட்டியல் போட்டார். எழுதிக் கொண்டே வரும்போது பளிச்சென்று ஒரு யோசனை பிறந்தது. ''சபாஷ்!'' என்று தம்மைத் தாமே பாராட்டிக் கொண்டார். 'தூக்கம் வராமற் போனதும் நல்லதாகப் போயிற்று!' என்று மகிழ்ந்து போனார்.

மறு நாள் கல்வி இலாகாவிலிருந்து வெளியான அந்த அறிக்கை பலரை மூக்கில் விரல் வைக்கச் செய்தது. ''பள்ளிகளில் இறுதித் தேர்வில் ஒரு மாணவன் ஆங்கிலத்தில் பெயில் மார்க் வாங்கியிருந்தாலும் அல்லது மார்க் எதுவுமே வாங்காமற் போனாலும் அதற்காக அவனைப் பெயில் ஆக்கக் கூடாது.'' — இது தான் அந்த அறிக்கையின் சாரம்.

லட்சோப லட்சம் மாணவர்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். ''அப்பாடா ! ஒழிந்தது சனி !'' என்று ஆங்கிலப் பாடப் புத்தகங்களையும், நோட்டுக்களையும் மூட்டையாகக் கட்டிப் பரண் மீது போட்டார்கள். அப்படிச் செய்வதற்கு விருப்பம் இல்லாதவர்கள் அவற்றை எடைக்குப் 'போட்டு, கிடைத்த காசைக் கொண்டு, முழுக்க முழுக்க 'கராத்தே' சண்டைகள் நிறைந்த ஓர் ஆங்கிலப் படத்தைக் கும்பலாகப் போய்ப் பார்த்துவிட்டு வந்தார்கள்.

ஒரு காலத்தில் கொம்பன்களாகக் கோலோச்சிய ஆங்கில ஆசிரியர்கள் கொம்பிழந்து, வேறு பாடங்களுக்குத் தாவினார்கள். ஆங்கிலப் பாட நூல்களுக்கு 'நோட்ஸ்' வெளியிட்ட பிரசுரகர்த்தர்கள் தங்களுக்கு நோட்ஸ் எழுதிக் கொடுத்த அதே ஆசிரியர்களின் ஆங்கில அறிவைப் பயன்படுத்திக் கொண்டு அயல்நாட்டு மர்ம நாவல்களைத் தமிழில் எழுதச் செய்து வெளியிட்டுக் காசு சேர்க்கத் தொடங்கினார்கள். மாணவர்கள் ஆங்கில வகுப்புகளில் அந்த நாவல்களைப் படிக்க ஆரம்பித்து, எப்போதும் போல நோட்ஸ் பிரசுரகர்த்தர்களுக்கு ஆதரவு அளிக்கத் தொடங்கினார்கள்...

ஒரு வருடம் ஓடியது. மறுபடியும் ஒரு நாள் அமைச்சருக்குத் தூக்கம் வராமல் போயிற்று. மாணவ சமுதாயத்தைப் பற்றி நினைத்துப் பார்க்கத் தமக்குக் கிடைத்த ஒரு நல்வாய்ப்பாகவே அதைக் கருதிய கல்வி அமைச்சர், தீவிரமாகச் சிந்தனை செய்து மறு நாள் இன்னோர் அறிக்கை விட்டார். ஏறக்குறைய முந்தைய அறிக்கையின் வாசகம்தான். விஷயம் என்னவெனில், 'கணக்கில் பெயில் மார்க் வாங்கியிருந்தாலும் மாணவனுக்குப் பாஸ் போட்டே ஆக வேண்டும்.'

அமைச்சர் திக்குமுக்காடித்தான் போய்விட்டார். இந்த அறிக்கைக்குக் கிடைத்த வரவேற்பைக் கண்டு. கணக்கு வழக்கற்ற கடிதங்கள், தந்திகள், பாராட்டுரைகள்.

''நான் அப்பவே நினைச்சேன்—நியூமாத்ஸ், அது இது என்று கொண்டு வந்து கழுத்தை அறுக்கிறார்களென்னு... இப்படி ஒரேயடியாகக் கணக்கின் மென்னியைப் பிடித்துத் தள்ளுவதற்காகத்தான் அப்படிச் செய்தார்கள் போலிருக்கு !'' என்று நியூமாத்ஸ் தெரியாததால் பிள்ளைகளுக்கு வீட்டுக் கணக்குப் போட்டுக் கொடுக்க விழி பிதுங்கிய பல பெற்றோர்கள் சொல்லிச் சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள். ''அல்ஜீப்ராவும் ஜாமெட்ரியும் என்னத்துக்கு?... கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் தெரிந்திருந்தால் போதாதோ ?'' என்று ஏற்கனவே முணகிக் கொண்டிருந்த கணக்கு விரோதிகள் கல்வி அமைச்சரின் அறிக்கையைக் கண்டு மகிழ்ச்சியில் காற்றிலே மிதந்தார்கள்.

பள்ளிகளில் கணக்கு வாத்தியார்களின் கர்வம் அடங்கியது. கரும் பலகைகள் எழுதுவாரும் துடைப்பாருமின்றி, சோகத்தின் சின்னமாய், கறுப்பு வர்ணம் பளபளக்க நின்றன. கலர் சாக்பீஸ் விற்பனையாளர்கள் கலர்ச் கண்ணாம்புதயாரிப்பில் மூழ்ந்தார்கள். டஸ்டர் துணி வியாபாரிகளோ தாங்கள் தயாரித்த நீலத் துணியைத் தங்கள் தலையிலேயே போட்டுக் கொண்டு தெருவில் வந்து நின்றார்கள்....

அதற்கும் அடுத்த ஆண்டு அதே தேதி வந்த போது அமைச்சருக்கு மறுபடியும் தூக்கம் வரவில்லை. எப்படி வரும் ? மனச்சாட்சி உறுத்தியதே ! 'இரண்டு வருடங்களாக மாணவ சமுதாயத்துக்குச் சலுகைகள் வழங்கி விட்டு, மூன்றாமாண்டு பின்வாங்கிவிடுவதா?' எனவே, விட்டார் இன்னோர் அறிக்கை :

''சரித்திரப் பாடத்தில் சைபர் மார்க் வாங்கினாலும் பாஸ் போட்டே ஆக வேண்டும் !''

சரித்திர ஆசிரியர்களின் சப்தநாடியும் ஒடுங்கியது இந்த அறிக்கையைப் படித்ததும். பாபர், ஹுமாயூன், அக்பர் ஆகிய அத்தனை பேருக்கும் எள்ளும் தண்ணீரும் இறைத்து விட்டு, ''முடி சார்ந்த மன்னரும் முடிவில் ஒரு பிடி சாம்பல் ஆகிப் போவார்கள்'' என்று சரித்திர வகுப்பில் வேதாந்தம் பேசத் தொடங்கினார்கள். யுத்தங்கள், போர்கள், கலகங்கள் ஆகியவற்றின் வருடங்களையும்,



எந்த மன்னன் யாருக்குப் பிள்ளை, எவனுடைய தாத்தா என்று வம்சாவழியையும் நெட்டுருப் போட வேண்டிய தொல்லை விட்டதென்று மாணவர்கள் அனைவரும் சரித்திர வகுப்புகளில் சப்தம் போடாமல் சீட்டு ஆடத் தொடங்கினார்கள். சில சின்னப் பையன்கள் ஆசிரியரின் அனுமதியுடன் வகுப்பின் ஒரு மூலையாகப் பார்த்துப் படுத்துக் கொண்டு தூங்கத் தொடங்கி, மாணவர் உலகில் ஒரு புதிய சரித்திரத்தையே ஆரம்பித்து வைத்தார்கள். சரித்திரத்தை அப்படி இலேசில் விட்டுவிட மனமில்லாத ஒரு சில நல்ல மாணவர்கள் சரித்திர வகுப்பின்போது சரித்திர நாவல்களைப் பகிரங்கமாகப் படித்து, தங்களது சரித்திர ஆர்வத்தைப் பிரகடனப்படுத்திக் கொண்டார்கள்....

நான்காம் ஆண்டு நெருங்க நெருங்க, ஜோஸ்யங்கள் கிளம்பின. ''இந்த வருஷம் விஞ்ஞானத்திலிருந்து விடுதலை!'' என்று ஒரு சாராரும், ''இல்லையில்லை... பூகோளத்தைத்தான் உருட்டிவிடப் போகிறார் அமைச்சர்!'' என்று இன்னொரு சாராரும் விவாதிக்கத் தொடங்கினார்கள். கல்வி அமைச்சருக்குச் சண்டை, சச்சரவு என்றாலே கட்டோடு பிடிக்காது. எனவே, அவருக்குத் தேதி நெருங்க நெருங்கத் தூக்கமே வரவில்லை. ஒரு தரப்பைத் திருப்திசெய்து, இன்னொருதரப்பின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்ள அவர் விரும்பவில்லை. யோசித்தார், யோசித்தார், இரவெல்லாம் கண் விழித்து யோசித்தார். பளிச்சென்று ஐடியா உதயமாயிற்று! ''விஞ்ஞானம், பூகோளம் — இரண்டிலுமே பாஸ் மார்க் வாங்க வேண்டியதில்லை'' என்று இரட்டைச் சலுகை அளித்து இரட்டிப்புப் பெயரைத் தட்டிக் கொண்டார்.




தராஜா

பியூரெட்டுகள் கண்ணீர் வடித்தன; பிப்பெட்டுகள் அனுதாபத்துக்கு இரண்டே இரண்டு சொட்டு வடித்தன. கண்ணாடிக் குடுவைகள் கற்சிலையாயின. அமிலம் கொதிப்பெல்லாம் அடங்கி, பீங்கான் ஜாடியில் போய் ஒளிந்து கொண்டது.

இவற்றின் கதை இப்படியென்றால், தேசப்படங்கள் எடுப்பாரும், பார்ப்பாரும், தேடுவாரும் இன்றி மூலையில் சுருண்டு கொண்டன. உலக உருண்டை, கண்ணாடிப் பீரோவின் கடைசித் தட்டில் போய்ப் பதுங்கியது.

மாணவ சமுதாயம் மொத்தமும் கல்வி அமைச்சருக்கு ஆயுள் முழுதும் நன்றிக்கடன் பட்டிருப்பதைச் சொல்லிச் சொல்லிப் பெருமைப்பட்டுக் கொண்டது. 'ஏதோ நம்மாலான நன்மையைச் செய்தோம்' என்று கல்வி அமைச்சரும் திருப்திப்பட்டார்.

இதன் பிறகு அமைச்சர் நிம்மதியாகத் 'தூங்கியிருப்பார் என்றுதானே எண்ணுகிறீர்கள்! அதுதான் இல்லை. வருஷத்துக்கொரு முறை தூக்கம் பிடிக்காமல் அவதிப்பட்டவர் வருஷம் முழுதும் அவஸ்தைப்பட ஆரம்பித்தார்! அடுத்த ஆண்டு சலுகை அளிக்கப் பாக்கி ஒன்றுமே இல்லையே என்று நினைத்த போது, பாவம், இராப் பகலாக ஏற்பட்ட கவலையில் அவருக்கு அடியோடு தூக்கமே வரவில்லை!





Dr. S. K.

## வாழ்க்கையில் வெற்றி பெறுங்கள்

தீய பழக்கங்களால் உடல் பலகீனம் அடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல் கைகால் அசதி, உடல் மெலிவு, தூக்கக் குறைவு, ஆயாசம், களைப்பு, பீதி, வெட்கம், பலம், வெறுப்பு, தளர்ச்சி, வாழ்க்கையில் வெறுப்பு உண்டாகி குடும்ப வாழ்க்கையில் மன வேதனையும், அதிருப்தியும், சஞ்சலமும் நிம்மதியில்லாமல் கஷ்டப்படுகிறார்கள். இப்படிப் பட்டவர்கள் நமது மருந்தை உபயோகிக்கும்போதே மேற்படி கஷ்டங்கள் நீங்கி மகிழ்ச்சிகரமான பலனைப் பெறலாம். வி. பி. பி.யில் பெற உடன் எழுதவும். போஸ்டேஜ் இலவசம். ஒரு மாத சிகிச்சை மருந்துகள் — மிக உயர் தரம் ரூ. 90, தங்கபஸ்பம் — சிட்டுக்குருவி லேகியம் 90 வேளை ரூ. 180, 60 வேளை ரூ. 120, 30 வேளை ரூ. 60.

கிளை : 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை - 1 போன் : 21448

வைத்தியத் திலகம், வைத்திய ராஜ்

**டாக்டர் S. காளிமுத்து,** R. M. P. (IND) V. V. C. A., M. I. H.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624601**

பழைய தாராபுரம் ரோடு, பழனி. போன்: 316, 316A, 420. தந்தி: "சித்தர்"

---

## ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

## ஸ்பெஷல் அப்பளாம்

(BROWN பேப்பரில் பேக் செய்யப்பட்டுள்ளது)

கலியாணத்திற்கும் மற்ற எல்லா விசேஷங்களுக்கும் சாலச் சிறந்தது. தினசரி உபயோகத்திற்கு நெருப்பில் சுட்டு சாப்பிடுவதற்கும் உகந்தது.




(REGD)

## கருவேப்பிலை பொடி

பூரத சத்து நிறைந்தது
ஜீரண சக்தி அளிக்கவல்லது

தயாரிப்பாளர்கள் : M/s. R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்

விவரங்களுக்கு

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,**

46, தம்பு செட்டித் தெரு, (போன் : 20401) சென்னை - 600 001

**மற்றும் ஊறுகாய்கள், பப்படம்**

**'திடீரெக்ஸ்'** Dhideerex (FOR INSTANT PREPARATION) **திடீர்**

இட்லி மிக்ஸ், தோசை மிக்ஸ் முதலியன

# பழமானாலும் கழுவிப் புசி நீரானாலும் காய்ச்சிக் குடி!

## குட்மார்னிங் டாக்டர்!



வயிற்றை அமுக்கிப் பிடித்துக் கொண்டு முகத்தில் வேதனை படர உள்ளே நுழைந்த வைத்தி கூறினார்: ''இரண்டு நாளா வயிற்றுப் போக்கு இருக்கு டாக்டர். வயிற்றையும் விட்டு விட்டு வலிக்கிறது. அடிக்கடி 'டாய்லெட்'டுக்குப் போக வேண்டியிருக்கு. கழிவுப் பொருளுடன் சீதமும் இரத்தமும் வெளிப்படறது.''

''காய்ச்சல் இருக்கிறதா?''

''இல்லே டாக்டர்.''

வைத்தியைப் படுக்க வைத்து வயிற்றுப் பகுதியை விரல்களால் அழுத்திச் சோதனை செய்து பார்த்துவிட்டு மலப் பரிசோதனைக்கு எழுதிக் கொடுத்தேன். சில மருந்துகளும் எழுதிக் கொடுத்தேன். அன்று மாலை பரிசோதனையின் முடிவுடன் வந்தார் வைத்தி. அவருக்குச் சாதாரண சீதபேதி (Bacillary Dysentery)தான் என்பது தெரிந்தது. மறுநாள் மீண்டும் மலப் பரிசோதனை செய்து வரச் சொன்னேன். அன்று அவருக்கு வயிற்று வலியும் இல்லை; சீதபேதியும் வெகுவாகக் குறைந்து விட்டது. மேலும் இரண்டு நாட்கள் மருந்து சாப்பிட்டதில் வைத்திக்குச் சீதபேதி அறவே நின்றுவிட்டது.

**''சீதபேதி எதனால் ஏற்படுகிறது டாக்டர்?''**

''சீதபேதி இரு வகைப்படும். வைத்திக்கு வந்திருந்தது 'பேஸில்லரி' சீதபேதி. இரத்தம் அதிகமாகக் கழிவுப் பொருளுடன் வெளிப்படும். வயிற்று வலி இருக்கும். இன்னொரு வகை 'அமீபிக்' சீதபேதி. 'அமீபா' எனப்படும் கிருமிகளால் ஏற்படுவது. கக்கூசுக்கு அடிக்கடி போக நேரிடும். ஆனால் வலி இராது. இரத்தமும் சீதமும் கலந்து போகும். 'அமீபிக்' சீதபேதி பெருங்குடலைப் பாதிக்கும். பெருங்குடலில் புண்கள் உண்டாகும். அதனால்தான் இரத்தமும் சீதமும் வெளிப்படுகிறது. இதற்கு அரைகுறையாகச் சிகிச்சை செய்து விட்டுவிட்டால் பல வருடங்களுக்குப் பிறகு மீண்டும் உபத்திரவம் ஏற்படும். முறையாகச் சிகிச்சை செய்து கொண்டால் ஆறு முதல் ஒன்பது நாட்களுக்குள் குணப்படுத்தி விடலாம்.''

**''அமீபிக் வகையை என்ன சோதனைகளின் மூலம் மருத்துவர்கள் கண்டறிய முடியும்?''**

''மலம், இரத்தப் பரிசோதனைகள், பேரியம் சோதனை இவைகளின் மூலம் கண்டறியலாம். மலத்தைப் பலமுறைகள் பரிசோதனை செய்ய நேரிடலாம். ஆசனவாய் வழியே ஒரு குழாயினை சர்ஜன் உட்செலுத்தி அதன் மூலமும் ஒரு சோதனை செய்ய வேண்டியிருக்கலாம். இக்குழாயின் ஒரு முனையில் வெளிச்சம் இருப்பதால் பெருங்குடலின் உட்புறச் சுவரைப் பரிசோதனை செய்யலாம். இதற்கு Sigmoidoscopy என்று பெயர்.''

**''அமீபாக்களை மருந்துகளின் மூலம் அறவே ஒழித்துவிட முடியுமல்லவா?''**

''மருந்து, இஞ்செக்ஷன் மூலம் அமீபிக் சீதபேதியைக் குணப்படுத்தி விடலாம். கவனிக்காமல் விட்டு விட்டால் அமீபா குடலுடன் நில்லாமல் ஈரல் முதலிய உறுப்புக்களுக்கும் பரவும். கட்டி உண்டாகவும் வழி ஏற்படும். இம்மாதிரி (Chronic) நிலையில் நோய் குணமடையத் தாமதம் ஆகும். இது பற்றி முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய ஒரு விஷயம்: நம் நாட்டில் அமீபிக் சீதபேதி மாதிரியே க்ஷயமும் பரவலாகப் பலருக்கு வருகின்றது. சுகாதாரக் குறைவே இரண்டுக்கும் மூலகாரணம். குடலில் க்ஷயம் காரணமாகப் புண் ஏற்பட்டு அதனால் இரத்தம் வெளிப்படுவதும் உண்டு. க்ஷயம் காரணமாக என்றால் நோயாளிக்குக் காய்ச்சல் வரும். அமீபிக் சீதபேதி என்றால் காய்ச்சல் இராது.''

**''அமீபிக் சீதபேதி எப்படித் தோன்றுகிறது?''**

''அமீபா கிருமிகள் நீரின் மூலம் பரவுகின்றன. குடி தண்ணீர் தூய்மையாக இருந்தால், கொதிக்க வைத்த நீரை மக்கள் பருகினால் அமீபாக்கள் உடலுக்குள் செல்லாமல் தடுக்கலாம். கறிகாய்கள், பழங்கள் இவற்றையும் நல்ல தண்ணீரில் கழுவுவது ஒரு முன்னெச்சரிக்கையாகும். அடிக்கடி பேதியாவது, பசியின்மை, வயிற்றில் இனம் புரியாத வலி, அல்லது வேதனை, உப்புசம் இருந்தால் உடனே மருத்துவரிடம் செல்வது நலம்.''

**டாக்டர் பி. ஆர். கிருஷ்ணமூர்த்தி கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**

# கோத்ரெஜ் நவ-தால்

## 18 ஆண்டுகளாக அனைவரும் விரும்பித் தேடும் பூட்டு...

## ஏனெனில் பத்திரமான பாதுகாப்பு வேண்டும் என்கிறபோது விலையைப் பற்றி கவலைப்படுவது யார்!




கோத்ரெஜ் நவ-தால் சாதாரண பூட்டுகளைவிட விலை அதிகம் என்பது உண்மைதான். எனினும் நம்பிக்கையான பூட்டுக்குக் கொஞ்சம் கூடுதலாகவே பணம் கொடுப்பதில யாருமே தயங்குவதில்லை. எனவேதான் கோத்ரெஜ் நவ-தால் அனைவரும் விரும்பும் பூட்டாக விளங்குகிறது. ஏனெனில் இதன் மீது நீங்கள் முழுமையாக நம்பிக்கை வைக்கலாம். இயந்திரம் மூலம் அழுத்தப்பட்டு, இணைப்பே இன்றி தயாரான பித்தளைக் கூட்டில், பலவீனப்படுத்தும் 'ரிவெட்டு'கள் இல்லை. 'கல்வனைஸ்' செய்யப்பட்ட, துருப்பிடிக்காத, எஃகு லெவர்கள் தகர்க்க முடியாதவை. 'டை' முறையில் வெட்டப்பட்ட 8 லீவர்கள் இதில் உள்ளன. ஆகவே அதற்குரிய சாவியால் மட்டுமே நவ-தால் பூட்டைத் திறக்க முடியும். இப்படிப்பட்ட சிறப்புகள் அமைந்திருப்பதால், கொடுக்கும் பணத்திற்கும் கூடுதல் பலனளிக்கிறது நவ-தால்.

சைஸ்கள் :
40 mm—5 லீவர்கள், 50 mm—6 லீவர்கள்;
65 mm—7 லீவர்கள், 85 mm—8 லீவர்கள்.

Godrej

உன்னதமான தயாரிப்புகளுக்கு ஒப்பற்றது—கோத்ரெஜ்

UG/15/8 TAM

# காணோம், கண்டோம்!





வீட்டில் குழந்தைகள் முரண்டு பிடித்தால், 'பிள்ளை பிடிக்கிறவனைக் கூப்பிடவா?' என்று பயமுறுத்துவார்கள்.

நிஜமாகவே ஒரு பிள்ளை பிடிப்பவனிடம் அகப்பட்டு, தப்பியும் வந்த அதிருஷ்டம் திருவல்லிக்கேணி ஹிந்து உயர்நிலைப்பள்ளியில் ஏழாம் வகுப்பில் படிக்கும் பதினொரு வயதுச் சிறுவன் கோபாலகிருஷ்ணனுக்குக் கிடைத்தது. மாலை பள்ளிக்கூடத்திலிருந்து கோபாலகிருஷ்ணன் வீட்டுக்கு வந்தான். டிபன் சாப்பிட்டான். ஒரு ரூபாய் கேட்டு வாங்கிக் கொண்டு பைக்ராப்ட்ஸ் சாலையிலுள்ள ஒரு கடைக்கு ரப்பர் பந்து வாங்கக் கிளம்பினான். மாலை ஐந்தரை மணி சுமாருக்கு ஜன சந்தடிமிக்க பெல்ஸ் ரோட் வழியாக நடந்து கொண்டிருந்தான். அப்போதுதான் அவன் பின் மண்டையில் மடார் என்ற அடி விழுந்தது.

◘ ◘ ◘

கோபாலகிருஷ்ணன் வீடு திரும்பாததால் பெற்றோர்கள் பயந்தார்கள்! எட்டு மணி. போலீஸுக்குப் புகார் செய்தார்கள்... ஆஸ்பத்திரிகளிலெல்லாம் போய்த் தேடினார்கள். வானொலியில் காணாமற் போனவர்களின் பெயர்ப் பட்டியல் அறிவிப்பில் இவன் பெயரையும் சேர்த்தார்கள். யாராவது தெய்வம் போல் சிறுவனை அழைத்துக் கொண்டு வந்து வீடு சேர்க்கமாட்டார்களா என்று இரவு முழுதும் கொட்டக் கொட்ட விழித்து உட்கார்ந்திருந்தார்கள்.

◘ ◘ ◘

கோபால கிருஷ்ணனுக்கு விழிப்பு வந்தபோது ரயிலில் பிரயாணம் செய்யும் பிரமை ஏற்பட்டது. இவன் கண்களை விரித்துப் பார்த்ததும் பக்கத்திலிருந்த ஓர் ஆசாமி சிறுவன் வாயில் இரண்டு மாத்திரைகளைப் போட்டுத் தண்ணீரையும் ஊற்றினான். கோபாலகிருஷ்ணன் மீண்டும் தூங்கிப் போய் விட்டான்.

அவன் மறுபடியும் கண் விழித்தபோது விடிந்திருந்தது. சில நிமிடங்களில் அந்த ரயில் ஒரு பெரிய நிலையத்தில் வந்து நின்றது. பறக்கப் பறக்கக் கண்களை விழித்த அந்தச் சிறுவனை, மாத்திரை கொடுத்த ஆசாமி கைகளைப் பிடித்து ரயில் பெட்டியைவிட்டுக் கீழே இறக்கிவிட்டான். உடனடியாக, அந்தப் பிளாட்பாரத்தில் இருந்தவர் ஒருவரிடம் 'திருவனந்தபுரத்துக்கு எந்தப் பிளாட்பாரத்திலிருந்து எப்போது வண்டி?' என்று விசாரித்தான்.

அந்த விசாரணை ஒலி கோபாலகிருஷ்ணன் செவிகளில் விழுந்தது. அத்துடன் அந்த ரயில் நிலையப் பெயர்ப் பலகையும் அவன் பார்வையில் விழுந்தது. அது திருநெல்வேலி ஜங்ஷன்.

கோபாலகிருஷ்ணனுக்குத் திருநெல்வேலி ஜங்ஷன் பரிச்சயமான இடம். அவன் தாயாரின் சகோதரி சமீபத்தில் உள்ள சேரன்மாதேவியில்தான் இருக்கிறாள். கோபாலகிருஷ்ணன் அடிக்கடி சேரன்மாதேவிக்குத் தன் தாயாருடன் போய்ப் பழக்கம்.

வெடுக்கென்று ஓர் உதறு உதறித் தன் கையை விடுவித்துக் கொண்டான். பிரயாணிகளின் கூட்டத்துக்குள் நுழைந்து ஓடினான். மாத்திரை ஆசாமியும் அவனைப் பிடிக்க ஓடினான்.

கோபால கிருஷ்ணனுக்கு அதிருஷ்டம் இருந்தது. அங்கேயிருந்த ஒரு குளியலறையில் புகுந்து பதுங்கிக் கொண்டான். பல நிமிடங்கள் அங்கே இருந்தான். தன்னை ஒருவரும் தொடர்ந்து வரவில்லை என்று நிச்சயப்படுத்திக் கொண்டு வெளியே வந்து ரயில் நிலையத்துக்கு எதிர்த்தாற்போல் உள்ள பேருந்து நிலையத்துக்குப் போனான். பந்து வாங்க முதல் நாள் மாலை வீட்டில் வாங்கிய ஒரு ரூபாய் டிராயர் பையில் இருந்தது. அதற்கு சேரன்மாதேவிக்கு ஒரு டிக்கட் வாங்கிக் கொண்டு பஸ்ஸில் நுழைந்து உட்கார்ந்தான்.

◘ ◘ ◘

நடுப் பகல் நேரத்தில் சென்னையில் உள்ள கோபாலகிருஷ்ணன் தந்தை சுப்புரத்தினத்துக்குச் சேரன்மாதேவியிலிருந்து ஓர் அவசரத் தந்தி வந்தது. 'கோபாலகிருஷ்ணன் பத்திரமாக இருக்கிறான்' என்ற செய்தியை அது தாங்கி வந்தது. 'ஏன் சிறுவன் அத்தனை அவசரமாகச் சேரன்மாதேவிக்குப் போனான்?' என்று மாத்திரம் புரியவில்லை.

அன்று பிற்பகலிலேயே சிறுவனை மீண்டும் திருநெல்வேலிக்கு அழைத்து வந்து டாக்டரிடம் காண்பித்தார்கள். பின் மண்டையில் கிடைத்த அடியில் லேசான காயம். அதற்கு அந்த மர்ம ஆசாமி ஏதோ கறுப்பு மையைத் தேய்த்திருந்தான். தூக்க மாத்திரைகளின் விளைவால் இரு கண்களும் பொசு பொசு என்று உப்பிப் போயிருந்தன. அதற்கு வைத்தியம் செய்து கொண்டு அன்று மாலை பஸ்ஸிலேயே அவனை அழைத்துக் கொண்டு சென்னைக்குக் கிளம்பிவிட்டார்கள். மறு நாள் காலை ஐந்தரை மணிக்கெல்லாம் வீர தீரன் கோபாலகிருஷ்ணன் மீண்டும் பெற்றோர்களிடம் வந்து விட்டான்.

— பட்டினத்தார்

# இசைக்கு மூன்று எளிய வழிமுறைகள்!

## செலவோ குறைவு

அதன் விலையை நோக்கும்போது புதிய எச்எம்வி ஃபியஸ்டா பாப்புலர் நிச்சயமாக மிகவும் சகாயமானது. நீடித்த உழைப்பிற்கேற்ப உறுதியும், திடமும் உடையது. கண்கவரும் இரு வண்ணக் காபினெட் கொண்டது. வசதிக்கேற்ப வாங்கி வாழ்நாள் முழுதும் இசைகேட்டு மகிழ வழியுண்டு.

## செவிக்கோ இனிமை

உள்ளேயிருக்கும் ஆம்பிளிஃபையர் மூலம் செவிக்கினிய சிறந்த ஒலியைப் பெறலாம். நீங்கள் விரும்பும் நிலையில் அமைத்துக் கொள்ள மூடியிட்ட ஒலிபெருக்கி.

## இசைத்தட்டிற்கோ மென்மை

இலேசான டோன்-ஆர்ம், ஊசிக்கும், இசைத்தட்டிற்கும் இதமாக இருப்பதால் தேய்மானத்தை மிகவும் குறைக்கிறது. எளிதாக மாற்றக் கூடிய ஊசி.

# புதியது!
# எச்எம்வி
# ஃபியஸ்டா பாப்புலர்

ரிக்கார்டு ப்ளேயர்.
ஏஸி மெயின்களுக்கும்,
பாட்டரிகளுக்கும் ஏற்றது.

**ரூபாய் 475 மட்டுமே.**

சிபாரிசு செய்யப்பட்ட அதிகபட்ச விலை எக்ஸைஸ் வரி உட்பட்டது. உள்ளூர் வரிகள் தனி.

**சகாயமான விலையில் விரும்பிய இசை கேட்கலாம்**




**ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்**
ஒலிமயமான எதிர்காலம்

சிறப்பாக இயங்க எவரெடி சூப்பர் 99 பாட்டரி உபயோகியுங்கள்




GC.8873




அத்தியாயம் 58

## ரங்கநாதன் மனமாற்றம்

கமலாவிடமும் அவள் தம்பி விசுவத்திடமும் விடை பெற்றுக் கொண்டு வீடு திரும்பிய கல்யாணத்தின் மனம் ஒரு நிலையில் இல்லை. 'நீங்கள் பவானியிடம் காதல் கொண்டிருக்கலாம்; பவானி அக்கா வேறு ஒருவர்மீது ஆசை வைத்திருக்கலாம்' என்று கமலா கூறியது திரும்பத் திரும்ப அவன் நினைவுக்கு வந்து அவனை அலைக்கழித்துக் கொண்டிருந்தது. 'அது உண்மையாக இருக்குமா? அதனால்தான் தன் காதலை ஏற்கப் பவானி மறுத்து விட்டாளா? கமலா கூறியது நிஜமாகத்தான் இருக்கும். இல்லாமலா 'வேண்டுமானால் அவள் வீட்டுக்கு இப்போதே போய்ப் பாருங்களேன்!' என்று கமலா ஒரு வேகத்தோடு கூறினாள்? கூடவே, 'பவானி அக்காவிடம் ஏதும் கேட்டுவிடாதீர்கள். இது பரம ரகசியம்' என்றும் கெஞ்சினாளே! சீச்சீ! இதிலெல்லாம் என்ன ஒளிவு மறைவு வேண்டிக் கிடக்கிறது? பவானி ஒருவனை விரும்பினால் அது பற்றி வெளிப்படையாகக் கூறி அவனை மணந்து கொள்வதுதானே? யாருக்கும் தெரியாமல் ரகசியமாக அவனை வீட்டுக்குள் வைத்திருந்து உபசரிப்பதென்பது எவ்வளவு கேவலம்? இதைச் சும்மா விடக் கூடாது. பவானியைக் கேட்டுவிடத்தான் வேண்டும். ஆனால் எனக்கு எப்படி விவரம் தெரிய வந்தது என்று அவள் கேட்டால்? கமலாவை இதில் இழுப்பானேன்? வேறு ஏதோ காரணமாகப் பவானி வீட்டுக்குப் போவது போலவும் அங்கே அவள் காதலனை யதேச்சையாகச் சந்தித்துவிட்டது போலவும் நடிக்க வேண்டியதுதான்! என்னை பவானி மணந்து கொள்ளாவிட்டால் போகட்டும். பாதகம் இல்லை; அதற்காக அவள் ஓர் அந்நியனைத் தன் வீட்டில் ஒளித்து வைத்துக் கொண்டு கொஞ்சிக் குலாவுவதைச் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியாது!'

பவானி கல்யாணத்தின் காதலை ஏற்காததால் அவன் மனம் விகாரப்பட்டுப் போயிருந்தது. பவானியின் ரகசியக் காதலனை எப்படியாவது பார்த்துவிட வேண்டும் என்று துடித்தான். 'உன் ரகசியம் அம்பலமாகி விட்டது பார்' என்று காண்பித்துக்கொள்வதில் தன் பழிவாங்கும் உணர்ச்சிக்குத் தீனி போட்டுக் குரூரத் திருப்தியடைய ஆசைப்பட்டான். ஆனால் இதனை யெல்லாம் அவன் உள்ளம் ஒப்புக் கொள்ளவில்லை. வேறு ஏதோ நல்ல சமாதானங்களைக் கற்பித்துக் கொண்டது!

'என்ன காரணத்தைக் கூறிக் கொண்டு இப்போது அவள் வீட்டுக்குச் செல்வது?' என்று யோசித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய இந்தப் பிரச்னையைத் தீர்த்து வைப்பதே போல ரங்கநாத முதலியாரிடமிருந்து அழைப்பு வந்தது! ஸ்தல யாத்திரை கிளம்பியிருந்த அவர் பாதியிலேயே திரும்பி வந்திருந்தார். , வந்ததும் வராததுமாகக் கல்யாணத்தைப் பார்க்க வேண்டும் என்று ஓர் ஆளிடம் சொல்லி அனுப்பினார். கல்யாணமும் பரபரப்படைந்தவனாக அவர் பங்களாவுக்குப் போய்ச் சேர்ந்தான்.

ரங்கநாத முதலியாரின் மனப் போக்கில் பெரிய மாறுதல் காணப்பட்டது. அவர் இரண்டொரு க்ஷேத்திரங்களுக்குத்தான் போனாராம். அதற்குள் ஞானோதயம் ஏற்பட்டு விட்டதாம். மேலே யாத்திரையைத் தொடராமல் திரும்பி விட்டாராம். மதுரை மீனாட்சிக்குத் தீபாராதனை நடக்கும் சமயம் மனத்தில் உதித்த யோசனையை நிறைவேற்றிவிட்டுப் பிறகுதான் யாத்திரையை மீண்டும் தொடரப் போகிறாராம்!

''அப்படி என்ன புரட்சிகரமான எண்ணம் உதயமாகி விட்டது உங்களுக்கு?'' என்று கேட்டான் கல்யாணம்.

''சொல்கிறேன் கேள். கமலா எவ்வளவு சின்னப் பெண்! எனக்குப் பெண்ணாகவே இருக்கக் கூடியவள் இல்லையா?''

''இல்லை, பேத்தியாகவே விளங்கக் கூடியவள்'' என்றான் கல்யாணம்.

''ரொம்பச் சரி. அப்படித்தான் எனக்கும் தோன்றியது. என்னுடைய பேத்திக்குச் சமதையாக எண்ண வேண்டியவளை நான் கல்யாணம் பண்ணிக் கொள்ள நினைத்தது எவ்வளவு பெரிய பாவம்! ஆனால் அதையே புண்ணியமென்றுகூட நான் கருதினேன். அந்தக் குடும்பத்துக்கு நன்மை செய்யவே அவளைத் திருமணம் செய்து கொள்வதாக என்னை நானே சமாதானப் படுத்திக் கொண்டேன்.''

''அவர்களது ஏழைமை நீங்கும் என்று கணக்குப் போட்டிருப்பீர்கள். ரொம்பப் பெருந்தன்மையுடன் நடந்து கொள்வதாக நினைத்திருப்பீர்கள்.''

''அதுமட்டுமில்லை கல்யாணம்; அந்தப் பெண்ணைப் படிக்க வைப்பதாகச் சொன்னேன். டாக்டருக்குப் படித்து மேல்நாடுகளுக்குக்கூட அவள் பயிற்சி பெறச் செல்லலாம் என்று ஆசை காட்டினேன். அவள் திரும்பி வந்ததும் இங்கே ஒரு தர்ம ஆஸ்பத்திரி தொடங்க உதவுவதாகவும் கூறினேன். ஆக மொத்தம் அவளை மணந்து கொள்வதன் மூலம் அவளுக்கு மட்டுமின்றி இந்த ஊருக்கே பெரிய சேவை புரிவதாக என்னை நானே ஏமாற்றிக் கொண்டேன்.''

''மதுரை மீனாட்சியைப் பார்த்ததும் இதெல்லாம் தப்புக் கணக்கு என்று புரிந்துவிட்டதாக்கும்!''

''அதற்கும் மேலே கூட ஓர் உண்மை பளிச்சிட்டது.''

''என்ன அது?''

''உண்மையில் அந்தப் பெண்ணுக்கும் அந்தக் குடும்பத்துக்கும் இந்த ஊருக்கும் நான் நன்மை புரிய விரும்பினால்...''

''விரும்பினால்...?''

''அந்த நல்ல காரியங்களைக் கமலாவை மணந்து கொள்ளாமலேயே நான் நிறைவேற்றலாமே என்று மீனாட்சி என்னிடம் சொன்னாள்!''

''தேவலாமே! கெட்டிக்காரக் கடவுள் தான்! சரியான போடு போட்டிருக்கிறாள்'' என்றான் கல்யாணம்.

''ஆமாம் அப்பா, ஆமாம்! மீனாட்சியல்லவா? என் அகக் கண்களைத் திறந்து விட்டாள். எனக்குப் புத்தி வந்தது. கமலாவைக் கல்யாணம் செய்து கொண்டால் நல்ல காரியங்களைச் செய்வது, இல்லாத போனால் இல்லை என்று இருக்கக் கூடாது; கமலாவைக் கல்யாணம் செய்து கொள்ளாமலேயே இவற்றை நிறைவேற்ற வேண்டும் என்று அறிந்து கொண்டேன்!''

''பலே! பலே! ரங்கநாதன் ஸார்! நான் மட்டும் இந்தியாவின் வைஸ்ராயாக இருந்தால் ஓர் அவசரச் சட்டம் உடனே பிறப்பிப்பேன்! இந்த நாட்டின் பணக்காரர்கள் யாரும் மதுரை மீனாட்சியைத் தரிசனம் பண்ணக் கூடாது என்று உத்தரவு போடுவேன்!''

''அடப் பாவமே! ஏனப்பா அப்படி?''

''பின்னே என்ன ஸார்? எல்லாரும் உங்களைப் போல் மீனாட்சியைத் தரிசனம் பண்ணப்போய், அவளும் எல்லாச் செல்வந்தர்களின் அகக்கண்களையும் திறந்து விட்டாளானால், அப்புறம் என்னைப் போன்று சமூகப் பணியாற்ற ஆசைப்படுகிறவர்களின் கதி என்ன ஆவது? எங்களுக்கு வேலையே இல்லாமல் போய் விடும் அல்லவா? சமூகப் பணி, சீர்திருத்தம் எல்லாவற்றையும் மூட்டை கட்டி வைத்து விட்டு, வயிற்றுப்பாட்டுக்கு ஒழுங்காகச் சம்பாதிக்கிற வழியைப் பார்க்க வேண்டியது தாகிவிடுமே!''

''விளையாட்டு இருக்கட்டும் கல்யாணம். நான் கமலாவை என் மகளாகத் தத்து எடுத்துக் கொண்டு என் செல்வத்தில் பெரும் பகுதியை அவளுக்கு எழுதி வைப்பது என்று தீர்மானித்து விட்டேன். நீ அவளை அவசியம் கல்யாணம் பண்ணிக் கொள். வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் உடனே குழந்தை குட்டி, குடும்பக் கவலை என்று ஏற்படுத்திவிடாதே! அவளைப் படிக்க வை. என் மகள் டாக்டராகாவிட்டாலும் நாலு டாக்டர்களை வேலை வாங்குகிற அளவுக்குச் சாமர்த்தியமும் அறிவும் பெற்றாக



வேண்டும். இந்த ஊரில் என் பெயரால் அமையப் போகும் ஆஸ்பத்திரிக்கு அவள் தலைவியாக விளங்கிச் சிறப்பாக நிர்வகிக்க வேண்டும். இதற்கு நீ அவளுக்கு உதவி, பக்கபலமாக இருக்கப் போகிறாய், புரிந்ததா?''

''பேஷாகப் புரிந்தது. கொஞ்ச நாட்களாகக் 'கமலாவின் கல்யாணம்' என்று ஊரில் என்னை எல்லோரும் கேலி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இனி, 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி கல்யாணம்' என்று கிண்டல் பண்ணப் போகிறார்கள். அதற்குத் தானே இந்த ஏற்பாடு?''

ரங்கநாதன் சிரித்தார். ''உனக்கு இந்த விளையாட்டுப் புத்தி போகாதே'' என்றார்.




''விளையாட்டு வேண்டாம். இதிலிருந்து விளையப் போகும் ஒரு விளைவையே சொல்கிறேன். என் அம்மாவுக்கு நான் கமலாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதில் விருப்பமில்லை. நூறு குற்றங்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஆனால் இப்போது நீங்கள் கமலாவுக்குச் சொத்து எழுதி வைத்துவிட்டதாகத் தெரிந்தால் உடனே திருமணத்துக்குச் சம்மதித்துவிடுவாள். 'கமலாவைப் போன்ற கண்ணான பெண் கிடைப்பாளோ!' என்று பெருமைப் பட்டுக்கொள்வாள். ஆனால் ஊரார் என்ன பேசுவார்கள்? பணத்துக்கு ஆசைப்பட்டுப் பண்ணிக் கொள்கிறார்கள் என்றுதானே சொல்வார்கள்?''

''ஊராருக்கு என்ன? நான் கமலாவைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் என்னைத் திட்டித் தீர்த்திருப்பார்கள். நீ பண்ணிக்கொண்டால் அதற்கும் ஓர் உள்நோக்கம் கற்பித்து உன்னை ஏசுவார்கள். நீ ஊரார் வாய்க்குப் பயந்து வாழப் போகிறாயா? ஊருக்கும் உனக்கும் உகந்தது என்று தோன்றுவதைச் செய்யப் போகிறாயா?''

''மதுரை மீனாட்சி பேரில் பாரத்தைப் போட்டுவிட்டு மேலே ஆகவேண்டியதைக்

கவனிக்க வேண்டியதுதான்!'' என்றான் கல்யாணம்.

''பலே! அப்படிச் சொல்லுடா சிங்கக் குட்டி!'' என்று ஆமோதித்தார் ரங்கநாதன். ''அப்படியானால் ஒன்று செய். இப்போதே போய்ப் பவானியிடம் அவளை நான் உடனே பார்க்க விரும்புவதாகக் கூறி அழைத்து வா. சட்ட பூர்வமாக எல்லாம் ஒழுங்காக நான் செய்ய வேண்டும். நீ எனக்கு மாப்பிள்ளையாக வரப் போவதால் இந்த விஷயத்தில் உன் அப்பாவின் உதவியை நான் கோருவது சரியாகாது'' என்றார் ரங்கநாதன்.

இந்தக் கோரிக்கையை அவர் வெளியிடவே காத்திருந்தவன் போல் கல்யாணம் ''இதோ இப்போதே போகிறேன்; பவானியைக் கையோடு அழைத்து வருகிறேன்'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டான்.

## அத்தியாயம் 59

# கல்யாணத்துக்கு அவமானம்

பவானியின் மாமா குணசேகரன் தன்னைத் தடுப்பதைப் பொருட்படுத்தாமல் தடதடவென்று மாடிப் படிகளில் ஏறினான் கல்யாணம்.

அதற்கு முன் மொட்டை மாடியிலிருந்து உமாகாந்தைக் கைத்தாங்கலாகப் பற்றிப் படுக்கை அறைக்குள் அழைத்துப் போயிருந்தாள் பவானி. கதவைச் சாத்தினாள், ஆனால் தாளிடவில்லை. மாமா குணசேகரன் கல்யாணத்தை வாசலிலேயே நிறுத்திச் சாக்குப் போக்குக் கூறி அனுப்பி விடுவார் என்ற நம்பிக்கையில் உமாகாந்தைப் படுக்கவைத்தாள். ''நாளைக் காலையில் நாம் சீக்கிரமே புறப்பட்டு விடலாம். நிம்மதியாகத் தூங்குங்கள்'' என்றாள். உமாகாந்தன் அவள் கரத்தை எடுத்துக் கன்னத்தில் ஒத்திக் கொண்டு உள்ளங்கையில் இதழ்களைப் பதித்தான்.

அதே சமயம், ''பவானி! பவானி!'' என்று அழைத்தபடியே கதவைப் 'படா'ரென்று திறந்து கொண்டு உள்ளே வந்தான் கல்யாணம். பவானியையும் கமலா குறிப்பிட்ட அவள் காதலனையும் ஒருசேரப் பார்த்து ஓரிரு விநாடிகள் பிரமித்து நின்றான்!

பின்னாலேயே குணசேகரன் இரைக்க இரைக்க ஓடி வந்தார். ''நான் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் என்னை ஒதுக்கித் தள்ளி விட்டு வந்திருக்கிறான், பவானி!'' என்றார்.

பவானி திகைப்பு நீங்கியவளாகக் கோபத்துடன் எழுந்து நின்றாள். ''யூ வில்லி இடியட்! கெட் அவுட்!'' என்றாள்.

''ஆமாம், நான் வில்லி இடியட்தான்! தெய்விகமான உன் பெயரையும் அழகான வெளித் தோற்றத்தையும் அறிவாற்றலையும் பார்த்து ஏமாந்து போனேன் அல்லவா? அத்தனைக்கத்தனை உன் மனம் விகாரமானது என்பது எனக்குப் புரியாமல் போய்விட்டது அல்லவா?''

''கெட் அவுட், யூ மானர்லெஸ் புருட்!'' என்று கத்தியவாறு ரௌத்திராகாரத்துடன் இரண்டு அடி முன்னால் எடுத்து வைத்தாள் பவானி.

''பேஷாகப் போகிறேன்! ஆனால் முதலில் நான் வந்த காரியத்தைக் கூறிவிட்டு...''

அவனைத் தொடர விடாமல் பவானி, ''பேசாதே! நீ சொல்லும் ஒரு வார்த்தையைக்கூட நான் கேட்க விரும்பவில்லை'' என்றாள். ''மாமா! எதற்காகப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்? கிக் ஹிம் அவுட்!''

பவானி முன்னேற முன்னேறக் கல்யாணம் அவளுக்கு இடம் கொடுத்துப் பின்வாங்கி அறைக்கு வெளியே வந்திருந்தான். மாடிப் படிகளை நெருங்கியும் விட்டான். ஆனால் அவன் பார்வை மட்டும் பவானியை நோக்கித்தான் இருந்தது. முதுகுப் புறம்தான் மாடிப் படிகளைப் பார்க்க இருந்தது. 'பவானி!'' என்று மீண்டும் ஏதோ கூற ஆரம்பித்தான் கல்யாணம். இப்போது அவனுக்குத் தான் அத்துமீறிப் பிரவேசித்தது தவறு என்றும் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றும் கூடத் தோன்றிவிட்டிருந்தது. ஆனால் பவானி எதையும் செவிமடுக்கும் மனநிலையில் இல்லை. கோபத்தின் உச்ச கட்டத்தை அடைந்திருந்தாள். ''ஏனய்யா? உனக்கு வெட்கம் மானம் இல்லையா? வேலைக்காரனைக் கூப்பிட்டுக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினால்தான் போவாயா?'' என்று கேட்டபடியே மேலும் இரண்டடி எடுத்து வைத்தாள். அவளுக்கு வழி விட்டு ஓரடி பின்னால் நகர்ந்தான் கல்யாணம். அவ்வளவுதான், மாடிப் படியில் இசகு பிசகாகக் காலை வைத்துத் திபுதிபுவென்று உருண்டு விழுந்தான். படிக்கட்டில் இடையிலிருந்த ஒரு திருப்பத்தில்தான் அவன் சலனம் தடைப்பட்டு நின்றது.

சுவரில் மோதிக் கொண்டதில் அவன் மண்டையில் 'விண், விண்'ணென்று வலி தெறித்தது. ஆனால் அதை விடவும் அதிகமாக இருந்தது அவமானம் பிடுங்கித் தின்றதால் வேதனை. மிச்சமிருந்த படிக்கட்டில் விடுவிடென்று இறங்கி, வாசலைத் தாண்டி, தோட்டத்தைக் கடந்து, வீதியில் தான் நிறுத்தியிருந்த காரில் ஏறி, அதனைக் கிளப்பினான். அந்தச் சமயம் பார்த்து அது கிளம்ப மறுத்து அவன் பொறுமையைச் சோதித்தது. ''சீ நன்றி கெட்ட ஜன்மமே! இப்படிக் கழுத்தறுப்பதற்குப் பவானியிடம் கற்றுக்கொண்டாயா?'' என்று ஆவேசத்துடன் கேட்டுக் கீழே இறங்கிப் 'படா'ரென்று கதவைச் சாத்தி, போதாக் குறைக்குக் காரை ஓர் உதையும் விட்டான்!

நடக்க ஆரம்பித்த கல்யாணத்தை அவன் கால்கள் நேரே மாஜிஸ்டிரேட் கோவர்த்தனன் வீட்டுக்கு அழைத்துப் போயின. அவர் வராந்தாவில் அமர்ந்து நிலாவை வெறித்து நோக்கியபடி எட்டாவது

அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?



கண்ணு, நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்

ஓடோனில் துர்நாற்றங்களை உடனடியாக அழிக்கிறது. பாத்ரூம் போன்ற இடங்களைத் தூய்மையாகவும் நறுமணத்துடனும் வைக்கிறது.

ஓடோனில் பல்வேறு நறுமணங்களில் கிடைக்கின்றன. ஓடோனில் வகைவகையான அளவுகளில், திறுகளில், டப்பாக்களில் கிடைக்கின்றன.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லி.
43, [illegible] பம்பாய் 400 001

CHAITRA-BLS-6 TAM REV.

ஆழ்ந்து குணமாக்கும்
அமிர்தாஞ்சன் டெர்மல்
ஆயின்ட்மென்ட், படை, சொரி,
நமைச்சல் போன்ற பல
சாதாரண சருமத்தொல்லை
களைத் தீர்க்கும் சக்தி மிக்க
நிவாரணி. இன்றே
ஒன்று வாங்குங்கள்!




அமிர்தாஞ்சன்
டெர்மல் ஆயின்ட்மென்ட்

அமிர்தாஞ்சன் லிமிடெட்
14/15 லஸ் சர்ச் ரோடு
சென்னை 600 004

# உங்கள் சருமத்தை பாதுகாத்துக் கொள்ளுங்கள்



SAA/AM/1905

கோப்பை ஸ்காட்ச் விஸ்கியைக் கண்டத்தில் கவிழ்த்துக் கொண்டிருந்தார்.

'எதற்காக இங்கு வந்து சேர்ந்தோம்?' என்று அவரை நெருங்கிப் பார்த்ததும்தான் யோசித்தான் கல்யாணம். 'இனம் இனத்தைச் சேரும் என்பதற்கு ஏற்பப் பவானியால் அவமதிக்கப்பட்ட நீ பவானியின் நிராகரிப்பால் குன்றிப் போயிருக்கிற கோவர்த்தனனைத் தேடி வந்திருக்கிறாய்' என்று அவன் மனம் சரியாகவே பதில் கூறிற்று.

ஆனால், ''என்ன கல்யாணம்? எங்கே வந்தாய்?'' என்று கோவர்த்தனன் கேட்டபோது, ''சும்மாத்தான் இப்படி வந்தேன்'' என்றுதான் சொன்னான் கல்யாணம்.

''தமிழ் அகராதியிலிருந்தே 'சும்மா' என்ற வார்த்தையை நீக்கிவிட வேண்டும்'' என்றார் கோவர்த்தனன்.

''என்ன ஸார் அப்படிச் சொல்லிவிட்டீர்கள்! 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கிற திறமரிது, அரிது!' என்று தாயுமானார் அலறியிருக்கிறாரே!''

''அவர் சும்மா இருப்பதுதானே? எதற்காக அத்தனை பாடல்களை எழுதி வைத்து நம் பிராணனை வாங்குகிறார்? போனால் போகட்டும். நீ வந்த காரியத்தைச் சொல்லு!''

''காரியம் என்று அப்படி ஒன்றுமில்லை. உங்களைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.''

''பார்த்தாயிற்று அல்லவா? போகலாமே?''

''இன்றைக்கு என் ஜாதக விசேஷம் போலிருக்கிறது. எங்கே போனாலும் வரவேற்பு ஒரு மாதிரி இருக்கிறது.''

''இன்னும் எங்கே போயிருந்தாய்?''

''பவானி வீட்டுக்குப் போனேன்.''

''எனக்குப் பிடிக்காத காரியம். தெளிவாகச் சொல்கிறேன். இனிமேல் பவானி வீட்டுக்குப் போவதை நீ நிறுத்திவிடு!''

''தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது!''

''அப்படியென்றால்?''

''இனிமேல் அவள் வீட்டுக்குப் போவதில்லை என்று நானும் சற்று முன்புதான் முடிவு செய்தேன்.''

''ஓ! பவானியே வாசல் பக்கத்துக்கு வழிகாட்டி விட்டாளா? அவள் சொன்னவுடனே கிளம்பி விட்டாயா? இல்லை வேலைக்காரனைக் கூப்பிட வேண்டியிருந்ததா?''

''அவ்வளவுக்கு நான் வைத்துக் கொள்வேனா? மாடிப் படியிலே பின்னங் கால்களை வைத்தேன்; நேரே கிழே வந்து சேர்ந்து விட்டேன்!''

கோவர்த்தனன் சிரித்து விட்டு, ''சரி, இனிமேலாவது அந்தப் பக்கம் தலை காட்ட வேண்டாம்'' என்றார். பிறகு, ''பவானிக்கு உடம்பு எப்படி இருக்கு? தேவலாமா?'' என்று வினவினார்.

''உடம்பா? நான் பார்த்தவரையில் சரியாகத்தானே இருந்தாள்'' என்றான் கல்யாணம்.

''இல்லை, இல்லை! உனக்குத் தெரியாது. பவானிக்கு இன்ஃப்ளுயென்ஸா. அதனால் கோர்ட்டுக்கு வர முடியவில்லை என்று சொல்லி அனுப்பினாள். அவள் சம்பந்தப்பட்ட கேஸைக்கூட இரண்டு வாரங்கள் ஒத்திப் போட்டிருக்கிறேன். நானே அவளைப் போய் விசாரிப்பதாக இருந்தேன். ஆனால் டாக்டர் 'விஸிட்டர்கள் யாரும் வராமலிருந்தால் நல்லது' என்று உத்தரவிட்டிருப்பதாக அவள் மாமா சொன்னார். அதனால்தான் போகவில்லை.''

''ஆமாம், ஆமாம்! இன்புளுயன்ஸா வந்திருக்கிறார். நானும்கூடப் பார்த்தேன்!''

''என்னப்பா கிண்டல் பண்ணுகிறாய்? 'இன்புளுயன்ஸா வந்திருக்கிறார்' என்றால் என்ன அர்த்தம்?''

''நான் பார்த்த இன்புளுயன்ஸாவுக்கு இரண்டு கால், இரண்டு கை, இரண்டு கண் எல்லாம் இருக்கு என்று அர்த்தம்! மிஸ்டர் இன்புளுயன்ஸா பவானியின் படுக்கையில் சயனித்து, அவளைப் பக்கத்தில் உட்கார்த்தி வைத்துக் கொண்டு, அவள் கைகளைப் பிடித்துக் கன்னத்தில் ஒற்றிக் கொண்டு, அவளைத் தன் இரு கண்களாலேயும் விழுங்கி விடுகிறவரைப் போலப் பார்த்துக் கொண்டிருந்தார்! மிஸ்டர் இன்புளுயன்ஸா ரொம்ப ஆபத்தான பேர்வழிதான்!''

கோவர்த்தனன் மதுக் கோப்பையை 'ஸ்டூல்' மீது வைத்துவிட்டு எழுந்தார். அவருக்கு உடல் தள்ளாடியது. கல்யாணத்தை நெருங்கி அவன் சட்டையை முறுக்கிப் பிடித்துக்கொண்டார். ''அடேய்! நீ சொல்வது நிஜம்தானா! பொய்யாக இருந்தால் உன்னை ஷூட் பண்ணி விடுவேன்!'' என்றார்.

பிறகு மெல்லத் திரும்பி மது போதை ஏறியதால் ஏற்பட்ட இலேசான தடுமாற்றத்துடன் நடந்து வீட்டுக்குள்ளே சென்றார். அவர் மறுபடியும் வாசலுக்கு வந்தபோது அவர் கரத்தில் இருந்த துப்பாக்கி, சந்திரக் கிரணம் ஒன்று பட்டுத் தெறித்ததால் மின்னியது! (தொடரும்)

---

**நிஜமாகவா?**
**நிஜமாகவா?**
**நிஜமாகவா?**



**லண்டனிலிருந்து அமெரிக்காவில் கலிபோர்னியாவுக்குத் தனி விமானத்தில் ஐந்து டன் எடையுள்ள ஒரு திமிங்கிலம் அனுப்பப்பட்டது.**

அதற்கான விமானச் செலவு நாலரை லட்சம் ரூபாய்.

அந்தத் திமிங்கிலத்தின் பெயர் 'ராமு'.



— கே. ஆர். - ஹிந்துஸ்தான் டைம்ஸ்

போஷாக்குத்
துள்ளி எழ
அதிக கோகோ

புதிய

# போர்ன்விடா




மற்றெந்த மால்ட் செறிந்த ஆரோக்கிய உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் என்றுமே அதிக கோகோ சேர்க்கப்பட்டுள்ளது. இப்பொழுதோ, போர்ன்விடாவில் முன்னைக் காட்டிலும் அதிக போஷாக்கும் அதிக இன்சுவையும் அளித்திட, அதிக கோகோ அடங்கியுள்ளது.

போர்ன்விடாவிலுள்ள கோகோவில், இரத்த அமைப்புக்கு அவசியமான இரும்புச் சத்து நிறைந்துள்ளது மற்றும் வைட்டமின்கள் 'பி' மற்றும் 'டி'யும் கால்ஷியம், பாஸ்பரஸ்.

காட்பரீஸ்

# போர்ன்விடா

சிறப்பான
சுவையூட்ட
அதிக கோகோ

# முன்னைக்காட்டிலும் அதிக கோகோவுடன்.

சோடியம், பொட்டாஷியம் போன்ற விலை மதிப்பற்ற கனிம உப்புகளும் அடங்கியுள்ளன. அவை மட்டுமா? போஷாக்கு தரும் கற்பண்புகள் அடங்கிய, மால்ட், பால் மற்றும் சர்க்கரை போர்ன்விடாவில் மண்டிக் கிடக்கின்றன. ஒரு கப் சூடான பாலில் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா கலந்து, இன்சுவையுள்ள போஷாக்கைப் பருகுங்கள்.

உங்கள் செல்வங்களுக்கு தினமும் இருவேளை போர்ன்விடா வழங்குங்கள். அவர்களுடைய உடல் சீராக வளரத் தேவையான, அசாதாரண போஷாக்கைத் தந்து உதவுகிறது அது. ஏன், அவர்களுடன் ஈடுகொடுக்க, உங்களுக்கும் அது தேவை.

## 75 பைசா மிச்சம்

போர்ன்விடா 450 கிராம் ரீ:பில் பேக் வாங்கி, 75 பைசா மிச்சப்படுத்துங்கள்! இந்தப் பேக்கைத் திறந்தவுடனே, வழக்கமான போர்ன்விடா டின்னில் அதை நிரப்பி, புதுமை கெடாமல் பாதுகாருங்கள்.




**அதிகப்படியான கோகோ, அதிகப்படியான வலிமை, அதிகப்படியான இன்சுவை**

OBM 6714 TM



# பிரின்ஸிபால்கள் பலவிதம்

ஜயா பாலகிருஷ்ணன்

நான் எத்தனையோ பிரின்ஸிபால்களிடம் வேலை பார்த்தேன். சிடுசிடுவென்றிருக்கும் கடுவன் பூனைகளிலிருந்து, சிரிக்கச் சிரிக்கப் பேசி உங்களைச் சிந்திக்க வைக்கும் அறிஞர்கள் வரையில் !

பத்திரிகைகளில் நான் கதை எழுதின குற்றத்துக்காக என்னைக் கல்லூரியை விட்டு வெளியேற்றினார் ஒரு பிரின்ஸிபால். ஏதோ பஞ்சமா பாதகங்களில் ஒன்றைச் செய்தவனை விசாரிப்பது போல் என்னை விசாரித்துவிட்டு, ''நகைச்சுவையாவது ஒன்றாவது ! அதையெல்லாம் கல்லூரியில் இறக்குமதி செய்யாதே. 'அகாடமிக் டிக்னிடி' கெட்டுவிடும். காலேஜ் கதை என்ன வேண்டியிருக்கு.....? காலேஜ் கதை? இப்படிப் பேராசிரியர்களை நீ நையாண்டி செய்தால் நாளைக்கு நம்மிடம் யார் மதிப்பு வைப்பார்கள்? தவிர, கம்பனும், வள்ளுவனும், ஷேக்ஸ்பியரும் எழுதாததை எல்லாமா நீ எழுதிவிடப் போகிறாய்? உன்னுடைய தறுதலைக் கதைகளும் நீயும்!'' என்ற தோரணையில் என்னென்னவோ சொன்னார்.

பிரபல வாரப் பதிப்பு ஒன்றில், பிரபல நகைச்சுவை எழுத்தாளர் ஆசிரியராக இருக்கப் போய் நான் தொடர்ந்து காலேஜ் கதைகள் எழுதி வந்தேன். என்னுடைய கதா பாத்திரங்கள் எல்லாம் நிஜமானவர்கள் என்ற பேச்சு எப்படியோ எங்கும் அடிபட்டது. இந்தக் கூற்று நிஜமல்ல. சக்ராச்சாரி என்ற கதாபாத்திரம் தான்தான் என்று நாலைந்து நபர்கள் சண்டைக்கு வந்தார்கள். ஏன், என்னைக் கல்லூரியை விட்டு வெளியேற்றின பிரின்ஸிபாலே அது தம்முடைய 'காரிகேச்சர்'தான் என்று எண்ணினதாகப் பின்னால் தெரிந்தது. எந்தச் சூட்டுடன் அந்தக் கல்லூரியைவிட்டு வெளியேற்றப்பட்டேனோ அதே சூட்டுடன் எனக்கு இன்னொரு கல்லூரியில் வேலை கிடைத்தது. ஆங்கிலத்தில் சிறந்த எழுத்தாளரான இந்தக் கல்லூரி பிரின்ஸிபால் என் எழுத்துக்காகவே தம் கல்லூரியில் வேலை போட்டுத் தந்தார். கடைசி மூச்சு இருக்கும் வரையில் என்னுடன் இலக்கியச் சர்ச்சைகள் நடத்தின அவரை நான் எளிதில் மறக்க முடியுமா என்ன?

மதச் சார்புள்ள கல்லூரி ஒன்றில் வேலை பார்க்கும் துர்ப்பாக்கியமும் எனக்கு ஏற்பட்டது. இங்கே சட்ட திட்டங்களிலெல்லாம் மிகக் கெடுபிடி. 'தும்முவதாக இருந்தாலும், கொட்டாவி விடுவதாக இருந்தாலும் மூன்று நாட்கள் முன்னதாகவே பிரின்ஸிபாலின் சம்மதம் பெற வேண்டும். 'அவர் அவ்வளவு எளிதில் சம்மதித்து விடுவாரா என்ன? மாணவர்களைக் கண்காணிப்பது போல் ஆசிரியர்களையும் கண்காணித்தார்கள். இரகசியமாகக் காதல் கதைகள் படிப்பதாகத் தெரிந்தால் கல்லூரியை விட்டு 'கல்தா' தந்துவிடுவார்கள். காதலித்து விட்டாலோ கேட்கவே வேண்டாம்!

இந்தக் கல்லூரியில் வேலை பார்ப்பது சுதந்திரப் பறவையான எனக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. கல்லூரியின் புகழைக் கண்டு ஏமாந்து விட்டேன் நான். 'எப்படா பிய்த்துக் கொண்டு போகலாம்' என்று காத்துக்கொண்டிருந்த என்னை ஓர் அரிய வாய்ப்பு தேடி வந்தது. சம்பள தினத்தன்று என்







**பிரதிபலிப்பு !**

முல்லைப் பற்கள் சிரிக்கும்போது
சேலைப் பூக்கள் எதற்காக ?
இதய மலர்கள் இருக்கும்போது
இணையும் கரப்பூ எதற்காக ?
பாலின் சுவையைக் கண்டவர்கள்
பழமும் வேண்டாம் என்பரோ ?
பாவை மனத்தைச் சேலை மலர்கள்
பார்க்கச் செய்தல் பாவமோ ?

மேலட்டை வண்ணப் படம்:
- சரஸ்வதி சத்தியமூர்த்தி

'பேபாக்கட்'டில் ஐந்நூறு ரூபாய்தான் இருந்தது. அறுநூறு ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டிருந்தேன். ஓடினேன் பிரின்ஸிபால் அறையை நோக்கி. அவர் 'நான் வருவேன்' என்று எதிர்பார்த்தார் போலும்! ஒரு டம்ளர் ஐஸ் வாட்டர் தந்து உபசரித்த பின் உட்காரச் சொன்னார்.

''ஏன் இந்தப் பரபரப்பு? ஏன் இந்த அமைதியின்மை?''

நான் வந்த காரியத்தைச் சொன்னேன்.

''எங்கள் கல்லூரியின் வழக்கமே அப்படித்தான். உத்தியோகமில்லாமல் எத்தனை பேர் இருக்கிறார்கள்? உங்களுக்கு நாங்கள் வேலை

இருந்தார். அதே வேலைக்கு மனுப் போட்டுப் பேட்டிக்கு அழைக்கப்பட்டிருந்த இன்னொருவன் நான்! கடைசி நிமிஷத்தில்தான் இது அவருக்குத் தெரிய வந்தது. இளைஞனை நான் முன்னுக்கு வருவதைத் தாம் தடுக்க விரும்பவில்லை என்று கூறித் தம் மனுவை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார். மனுஷன் நான் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. என் துரதிர்ஷ்டம், பிரின்ஸிபால் விட்டுத் தந்தும், சில சொந்தக் காரணங்களினால் என்னால் அந்தப் பொறுப்பை ஏற்க முடியவில்லை. ஆனால் இந்தச் சம்பவம் என் மனத்தில் ஒரு நிலையான இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது. பின்னர் நான் எழுதின 'அஞ்சலி யாருக்கு?' என்ற கவிதையின் கரு இந்த நிகழ்ச்சியில்தான் அடங்கியிருந்தது.




போட்டுத் தந்ததே பெரிய காரியமில்லையா? தவிர, 'டீச்சிங்' என்று வந்தது விட்டால் பணத்தைப் பற்றி நினைக்கக் கூடாது. இலட்சிய வெறிதான் முக்கியம்'' என்று பேசிக் கொண்டு போனார். இலட்சிய வெறி மனைவிக்கும், குழந்தைகளுக்கும் சோறு போடாது என்று கூறி அப்பொழுதே கால் கடுதாசி தந்தேன். அது மட்டுமா? எனக்குத் தரவேண்டிய பாக்கிப் பணத்தையும் வசூலித்த பின்தான் மிகப் புனிதமான அந்தக் கல்லூரியை விட்டு வெளியேறினேன்.

நேர்மாறாகத் தமக்குக் கிடைக்கவிருந்த பதவியை எனக்கு விட்டுத் தந்த பெருந்தன்மை படைத்த பிரின்ஸிபாலுமுண்டு. இவர் ரிடையரான பின் டில்லியில் ஒரு பெரிய வேலைக்கு மனுப் போட்டுப் பேட்டிக்கு வந்

தம்மை 'கிளப்'பில் கண்டாலும் எழுந்து நிற்கவேண்டும், இல்லாவிட்டால் தொலைத்து விடுவேன் என்று பூச்சாண்டி காட்டும் பிரின்ஸிபால், வலது காலுக்கு ஒரு நிற 'ஸாக்ஸு'ம், இடது காலுக்கு இன்னொரு நிற 'ஸாக்ஸு'ம் அணிந்து வகுப்புக்குச் செல்லும் ஞாபக மறதி பிரின்ஸிபால், 'கோ எஜுகேஷனா? அது நோ எஜுகேஷன்' என்று காத தூரம் ஓடும் பிரின்ஸிபால், கல்லூரி தீப்பிடித்தாலும் கல்லூரிமைதானத்திட்டம் வீற்றிருக்கும் பிரின்ஸிபால், ஞானச் சுடரான பிரின்ஸிபால், எனக்கு வாழ்க்கையில் வழிகாட்டி இன்னும் உதவிகள் செய்து வரும் தாடிக்கார பிரின்ஸிபால் — அப்பப்பா, இவர்களைப் பற்றியெல்லாம் தனித் தனியாக எழுத எனக்கு ஏது நேரம்? ஏது பொறுமை?

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

பதிவு அலுவலகம்: 13-H, கச்சேரி ரோடு, மாயவரம்-609001

31-3-1976 முடிய

| | |
|---|---|
| 1. அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 5 லட்சம் |
| 2. செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வுகள் | ரூ. 5.5 லட்சம் |
| 3. நடைபெறும் சீட்டுகளின் மதிப்பு | ரூ. 8 கோடிக்கு மேல் |

<u>கிளை அலுவலகங்கள்</u>

மாயவரம், காரைக்கால், பாண்டிச்சேரி
திருப்பாப்புலியூர், கும்பகோணம், தஞ்சாவூர்
சிதம்பரம், சென்னை, காஞ்சீபுரம்

"உயர்துகை ஏலச் சீட்டு நடத்துபவர்கள்."

மாயவரம்
27-5-76

R. கல்யாணசுந்தரம்
மானேஜிங் டைரெக்டர்

# ஃபாஸ்ஃபோமின்

குடும்பத்தினர் அனைவரும் ஆரோக்கியத்துடன் திகழ ஃபாஸ்ஃபோமின்






உங்கள் வாழ்வு
இன்ப மயம்—
ஆரோக்கியம்
இருக்கையில்
என்ன பயம்!

SARABHAI CHEMICALS LTD.

Shilpi SC-2A/76 tam



# காவிரிக்கரையில் காகித ஆலை

## கி. ராஜேந்திரன்

ஏடக் கடத் தலையங்கம் எழுத வேண்டுமென்றால் இனி ஈரோட்டுக்குப் போய்த்தான் எழுத வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறேன்! ஏனென்றால், ஈரோடுக்கு அருகேயுள்ள பள்ளிப்பாளையத்தில்தான் சேஷசாயி காகித ஆலை இருக்கிறது. இங்கே ராட்சத இயந்திரங்கள் காகிதத்தைத் தயார் செய்ய, உருளைகளில் அவை சுற்றிக் கொள்ளும்போது தொட்டுப் பார்த்தால் வெப்பமாக இருக்கும். உடனேயே அந்தத் தாளில் தலையங்கம் எழுதினால் கடச் சுட அமையும் அல்லவா ?

1962ம் ஆண்டில் ஆரம்பமான சேஷசாயி காகித ஆலை, கடந்த பதினாறு ஆண்டுகளில் பல இடையூறுகளைச் சமாளித்து வெற்றி நடை போடுகிறது. இந்த ஆலையின் முதல் விரிவாக்கத் திட்டம் 1967ல் பூர்த்தியாயிற்று. அச்சமயம் உற்பத்தி ஆற்றல் 20,000 டன்னிலிருந்து 35,000 டன்னாக உயர்ந்தது. இதற்கான செலவு ரூபாய் நாலு கோடிக்கும் குறைவு. இப்போது இரண்டாவது விரிவாக்கத் திட்டத்தை மத்திய அமைச்சர் திரு டி. ஏ. பை அண்மையில் ஆரம்பித்து வைத்திருக்கிறார். இது நிறைவேறும்போது உற்பத்தி ஆற்றல் 35,000 டன்னிலிருந்து 55,000 டன்னாக உயர்ந்திருக்கும். முதல் கட்டத்தில் 15 ஆயிரம் டன் உற்பத்தி அதிகரிக்க நாலு கோடிக்கும் குறைவான மூலதனம் தேவைப்பட்டது. இரண்டாவது கட்டத்தில் 20 ஆயிரம் டன் உற்பத்தி அதிகரிக்கத் தேவைப்படுவதோ 20 கோடி ரூபாய்! அதுதான் 1967க்கும் 1976க்கும் உள்ள வித்தியாசம்! பண வீக்கம் என்று பொருளாதார நிபுணர்கள் அடித்துக் கொள்கிறார்களே, இதைத்தான்!

இவ்வளவு மூலதனத்தை விழுங்கினாலும் செய்தாக வேண்டிய அவசியப் பணி என்று மத்திய அரசு உணர்ந்து, முழு ஒத்துழைப்பையும் தந்திருக்கிறது. காகிதத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்தத் தேவையில்லை. அரிச்சுவடி பாடத்திலிருந்து ஐந்தாண்டுத் திட்டம் வரை எதுவானாலும் காகிதத்திலிருந்துதானே தொடங்க வேண்டும் ? எதிர்காலத்தில் காகிதத்துக்குக் கடும் பஞ்சமே ஏற்படும் என்று எதிர்பார்க்கின்றனர் நிபுணர்கள். எனவேதான் அரசு ஒத்துழைத்துத் தேவைப்படும் இருபது கோடி ரூபாயில் பதினைந்து கோடியைப் பாங்குகள் மூலமாகவும் பல தொழில் அபிவிருத்தி நிறுவனங்கள் வாயிலாகவும் கொடுத்து உதவுகிறது. பாக்கி ஐந்து கோடி ரூபாய்தான் தனியார் பங்கு முதலீடு.

இவ்வளவு பெரிய அளவில் அரசு நிறுவனங்கள் கடன் கொடுத்து உதவ வேண்டுமானால் சேஷசாயி காகித ஆலையிடமும் அதன் நிர்வாகிகள் ஆற்றலிலும் அவற்றுக்குள்ள நம்பிக்கையைப் புரிந்து கொள்ளலாம். இந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாகும் முதல் நபர் திரு விசுவநாதன் – சேஷசாயி காகித ஆலையின் நிர்வாக இயக்குநர். "1978க்குள் இரண்டாவது விரிவாக்கத் திட்டத்தை நிறைவேற்றி விடுவோம்" என்று துணிவும் தன்னம்பிக்கையுமாகப் பேசுகிறார் திரு விசுவநாதன். அந்த ஆற்றல் அவருக்கு நிரம்பவே உண்டு என்பதை சேஷசாயி காகித ஆலையை ஒரு முறை சுற்றி வந்து பார்க்கும் எவரும் உணர்ந்து கொள்ளலாம். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்கள். ஒரு பெரிய தொழிலகத்தின் விஞ்ஞான–பொறியியல் நுணுக்கங்கள், கணக்கு வழக்கு விவகாரங்கள் முதலியன எல்லாருக்கும் அர்த்தமாகக்கூடிய விஷயங்கள் அல்ல. ஆனால்

திரு விசுவநாதன்






நமது நாட்டு அறிஞர்கள் அயல் நாட்டுக்குப் போய் விடுவதை Brain Drain என்று சொல்கிறோம்.

சமீபத்தில் பிரான்ஸ் நாட்டில் சாக்கடை வழியாக வந்து ஒரு பாங்கில் பல கோடி ரூபாய் மதிப்புக்குக் கொள்ளை அடித்துப் போனதை அமெரிக்கப் பத்திரிகை நியூஸ் வீக் Drain Brains என்று வர்ணித்திருக்கிறது.

- கே. ஆர்.

---

தொழிலாளரிடையே காணப்படும் சுறுசுறுப்பு, நிர்வாகிகளிடம் அவர்கள் வைக்கும் மரியாதை, சுற்றுப்புறச் சூழலின் சுத்தம், தொழிலாளர்களுக்கு உள்ள வசதிகள் முதலிய வேறு பல அம்சங்கள் யாரும் எளிதில் ரசித்துக் கொள்ளக் கூடியவை. ஒன்றிலிருந்து மற்றொன்றின் சிறப்பையும் நாம் அனுமானிக்க முடியும்.

சேஷசாயி ஆலைக்கு நான் போயிருந்தபோது உற்பத்தி மேற்பார்வையாளர் திரு எஸ். ஜி. ரங்கன் ஏதோ சரித்திரக் கதைகளில் வரும் சுரங்கப் பாதைகள் போன்ற படிகளில் பத்துத் தடவை ஏறி இறங்க வைத்தார். தொழிலகத்தை முழுமையாகச் சுற்றிக் காட்டுகிறேன் என்று ஏறத்தாழ இரண்டு மைல் நடக்கவும் வைத்தார். அத்தனைக்கப்புறமும் காகிதத் தயாரிப்பின் நுணுக்கங்களை நான் அறிந்து கொண்டு விட்டதாகச் சொல்ல முடியாது. ஆனால் இந்தியாவிலேயே முதன் முதலாக ஐ. எஸ். ஐ. உத்தரவாதம் பெற்ற காகிதமாக சேஷசாயி காகிதம் சிறப்புப் பெற்றதில் வியப்பொன்றும் இல்லை என்பதை எளிதில் அறிய முடிந்தது. அந்த அளவுக்கு ஆலையில் எங்கும் துப்புரவும், சுறுசுறுப்பும், ஆற்றலுடன் கூடிய இயக்கமும் காணப்பட்டன.

1963–64க்குப் பிறகு சேஷசாயி காகித ஆலை முழுக்க முழுக்க இந்திய விஞ்ஞானிகள், பொறி இயல் நிபுணர்களின் மேற்பார்வையிலேயேதான் நடக்கிறது என்று திரு எஸ். ஜி. ரங்கன் தெரிவித்தார். தற்போது மேற்கொள்ளப்பட்டிருக்கும் விஸ்தரிப்புத் திட்டத்துக்கும் அந்நிய நிபுணர்களின் ஒத்துழைப்பை இவர்கள் கோரிப் பெறவில்லை. ஒரு சில ஆலை பாகங்கள் அயல்நாடுகளிலிருந்து தருவிக்கப்படுகின்றன; அயல்நாட்டவர் ஒத்துழைப்புடன் இந்தியாவில் இயங்கும் சில நிறுவனங்களில் வேறு சில ஆலை பாகங்கள் தயாரிக்க ஆர்டர்கள் தரப்படுகின்றன; ஆனால் பள்ளிப் பாளையத்தில் நடக்கும் விரிவாக்க வேலைகள் — ஆலைப் பாகங்களை இணைத்து, நிர்மாணித்து, இயக்கும் பணிகள்— அனைத்தும் இந்திய நிபுணர்களின் மேற்பார்வையிலேயே நடக்கும்.

இத்தகைய பெருமைகள் பலவற்றுக்கு இடையில் திரு எஸ். ஜி. ரங்கனுக்கு ஒரு குறையும் உண்டு. பத்திரிகைக் காகிதப் பற்றுக்குறை பற்றி எல்லாரும் ஒரு குரல் அழுகிறார்களே, இதற்கு அந்நியச் செலாவணி ஏகமாகச் செலவாகிறது என்று துக்கப்படுகிறார்களே, அப்படி இருக்கும்போது இந்தியாவில் உள்ள காகித ஆலைகள் அனைத்தும் இத்தனை சதவிகிதம் பத்திரிகைக் காகிதம் (Newsprint) தயாரித்தாக வேண்டும் என்று அரசு ஏன் உத்தரவு போடக் கூடாது என்பதுதான் அந்தக் குறை.

'' ஒரு வேளை இப்போதுள்ள காகித ஆலைகளுக்கு நியூஸ் பிரிண்ட் தயாரிக்கும் ஆற்றல் இல்லையோ என்னமோ ?'' என்று நான் பலவீனமான குரல் எழுப்பினேன்.

'' யார் சொன்னது ? என்னிடம் சொல்லுங்கள், கட்டுப்படியாகிற விலையில் பிரமாதமான நியூஸ் பிரிண்ட் தயாரித்துத் தருகிறேன்'' என்று மேஜையைத் தட்டினார் ரங்கன்.

அவர் கோரிக்கை அரசினர் காதில் விழுந்து, பத்திரிகைக் காகிதம் பழுப்பின்றி, பழுதின்றி, பணம் பறிப்பதும் அதிகமின்றித் தயாரானால் கோடிக்கணக்கான பத்திரிகை வாசகர்கள் வாழ்த்தாமலா போவார்கள்? ஊதுகிற சங்கை ஊதிவிட்டேன், விடிகிறபோது விடியட்டும் !

திரு ரங்கனுக்குக் காகித ரசாயனத்தின் மீது காதலே உண்டு என்பதைச் சற்று நேரம் அவரிடம் பேசிக் கொண்டிருந்ததில் உணர்ந்து கொண்டேன். காகிதத்தை விட்டால் அவர் கவனத்தை அடுத்தபடி கவர்வது எஸ்.பி.பி. காலனியில் உள்ள கோயில். மறக்காமல் எங்கள் கோயிலைப் பற்றி எழுதுங்கள் ஸார் என்று திரும்பத் திரும்பச் சொன்னார். ''காகிதத்தை மறந்தாலும் கோயிலை மறக்கமாட்டேன்'' என்று உறுதி கூறிவிட்டு வந்தேன். இதோ எழுதியும் விட்டேன்.

சேஷசாயி ஆலையில் பணியாற்றுவோர் குடியிருக்கும் காலனிக்கென்று அவர்கள் தாங்களாகவே பெரு முயற்சி மேற்கொண்டு கட்டிக் கொண்ட கோயிலில் மூல விநாயகருடன், கல்யாண சுப்பிரமணியரும், கோதண்டராமனும், ஆஞ்சநேயரும், நவக்கிரகங்களும் எடுப்பும் எழிலும் மிக இருந்து அருள்பாலிக்கிறார்கள்.

அடுத்த முறை ஏர்காடு எக்ஸ்பிரஸில் ஈரோடு போக நேர்ந்தால் அதிகாலை நேரத்தில் ஜன்னல் வழியே பாருங்கள். ரயில் காவிரி ஆற்றைக் கடக்கும்போது அற்புதமானதொரு காட்சி தென்படும். சேஷசாயி ஆலைக்குத் தேவையான ஏராளமான நீரைத் தங்கு தடையின்றிக் கொடுக்கும் காவிரி, பாறைகளினூடே முட்டி மோதிக் கொண்டு பாய்ந்து செல்லும். அதனால் வளமடைந்த பசுமையான வயல்களுக்கிடையில் வெளேர் என்ற நிறத்தில் ஒரு வாத்து மந்தை நடைபயிலும். அப்பால் தென்னந் தோப்புகளும் வாழைத் தோட்டங்களும் செழுமையில் போட்டியிடும். இவற்றுக்கும் பின்னணியில் சேஷசாயி காகித ஆலையின் புகைபோக்கியும் கூரையும் சூரிய ஒளியில் தக தகக்கும். உழவுக்கும் தொழிலுக்கும் இங்கே — நம் அருமை பாரத நாட்டில் — ஒளி மயமான எதிர்காலம் உண்டு என்பதை உணர்த்தி உடல் சிலிர்க்கச் செய்யும் காட்சி அது.

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது.

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. கம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப்பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட்ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.

## புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



டாடா ஸ்டீல்

TIS-1247 A

உஷாவுக்குத்
தேவை பொங்கி வரும் நுரை

தீபாவுக்குத்
தேவை பொலிவு தரும் சலவை








# ரம்யா
## இவர்கள் இருவரையுமே திருப்தி செய்கிறது

பொங்கி வரும் நுரை-
பொலிவு தரும் சலவை




இத்தரமான தயாரிப்பை அளிப்போர்:
அல்ட்ராமரீன் & பிக்மண்ட்ஸ் லிமிடெட், ராணிப்பேட்டை, தமிழ்நாடு
விற்பனையாளர்கள்: பாரி & கம்பெனி லிமிடெட்

SAA UP/2120

# சேரமான் காதலி

அத்தியாயம் 11

## பிரிவினும் சுடுமோ இஸ்ரவேல்...?

"ஒரு மன்னன் சந்நியாசி ஒருவர் சொன்ன பூர்வ ஜென்மக் கதைகளை நம்பி, மனம் ஊசலாடலாமா?'' — கூடாதுதான்.

''ஒரு பூத ஜாதிக்கிளி, மலைநாட்டுக் குறத்தி சொன்ன கதையை நம்பி, மனம் கலங்கலாமா?'' — கூடாதுதான்.

ஆனால் சேர நாட்டின் வரலாற்றில் ஒரு புதிய வம்சத்தை அங்கீகரிக்க விரும்பாத விதி, அவர்களை நம்பும்படி செய்தது.

கல்வி கேள்விகளில் தேர்ந்த சேரமான் பெருமாள், கண்ணீர் மல்க, அரண்மனையில் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார்.

உலகம் முழுதும் அவனே என்று கருதி, பூத மரபுகளைக் கூட மாற்றிக் கொண்டு, இந்துப் பெண்ணாகக் காட்சியளித்த பூஜியானா, முள்ளாலே படுக்கையிட்டு, அதன் மீது நெருப்புக் கங்குகளைத் தூவிப் புரண்டு கொண்டிருந்தாள்.

எழுவாள்; விழுவாள்; இனி ஏது செய்வேன் என்பதுபோல் அழுவாள்; இதயத்தால் பரம்பொருளைத் தொழுவாள்; ஒரே இரவில் இளமையே சீர்குலைந்தது போல் அவள் காணப்பட்டாள்.

காட்டுவெளிக் கூடாரம் ஒன்றில் அந்தக் குறத்தியும், நாட்டுப் புறக் குடிசை ஒன்றில் ராஜசேகர சுவாமியும் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

சுண்ணாம்பிலே வெண்ணெயைக் கலந்த அவர்கள், அது சிவப்பாக மாறியதை அறியாமல் இல்லை.

ஆனால் ஒருவருக்கொருவர் சம்பந்தமில்லாதவர்கள் போல் காணப்பட்ட அந்த இருவரும் கிளப்பி விட்ட பூதம், பூஜியானாவின் கூந்தலைக் கலைத்தது; குங்குமத்தைக் கரைத்தது; சேரமான் பெருமாளைச் சித்திரவதை செய்தது.

போர்க்களத்தில் புறமுதுகு காட்டாதவரும், அரசியலிலே இடி, மின்னல் தோன்றும் போதும் அசைந்து கொடுக்காதவருமான சேரமான், பரிகாரமில்லாத ஒரு கேள்விக் குறியின் கீழ் பைத்தியக்காரன் போல் உலாவிக் கொண்டிருந்தார்.

பட்டத்து ராணியின் மூலம் குழந்தைப் பேறு இல்லாத நிலையில், இன்னொருத்தியின் மூலம் கிடைக்கப் போகும் செல்வமுமா எமனாகக் காட்சியளிக்க வேண்டும்?

'வரட்டும், பார்த்துக் கொள்ளலாம்' என்று விட்டு விடவும் அவரால் முடியவில்லை; 'இது என்ன மூட நம்பிக்கை?' என்று ஒதுக்கி விடவும் முடியவில்லை.

'சேர நாடும் சேர வம்சமும் திசை தப்பிப் போவது போல் தனக்குத் தோன்றுவதாக' ராஜசேகர சுவாமி சொன்னது, பாலிலே விழுந்த பல்லி போல் அவர் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தது.

நள்ளிரவு.

பள்ளி கொள்வதற்காக அந்தப் பச்சைக் கிளியை அவர் தேடிப்போகும் அதே நேரம்.

இப்போது ஆயிரம் கேள்விகளால் உருவாக்கப்பட்ட நடமாடும் பொம்மை போல் அவர் நடந்து கொண்டிருந்தார்.

மாறு வேடமிட்டுக் குதிரையிலே செல்லும் அவர், இப்போது முக்காடிட்டு ஒரு பிச்சைக்காரனைப் போல் சென்று கொண்டிருந்தார்.

எவ்வளவு சிக்கலுக்கும் சீர்குலைவுக்கும் பிறகு அந்த ராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொண்டவர் அவர்?

மேக மூட்டம் கலைந்து விட்டதென்று வெளியே வந்த போது, மீண்டும் மழை வந்து விட்டதே அவர் வாழ்க்கையில்!

கண்ணதாசன்

ஊரறிய உலகறிய, தேரில் வந்தே அந்தத் திருமகளைச் சந்திக்கலாம் என்றிருந்தும், நேரில் வந்த சந்நியாசி அவரை நிலைகுலையச் செய்து, கால் நடைகளில் ஒன்றாக ஆக்கி விட்டார்.

மாளிகைக் காவலர்கள் மன்னரை அந்த நிலையில் எதிர்பார்க்கவில்லை.

வெளிக்கதவு திறக்கப்பட்டது; வாயிற்கதவும் திறக்கப்பட்டது.

எண்ணெயின்றி அணையவிருந்த தீவட்டிகள் மளமளவென்று ஏற்றப்பட்டன.

அரைகுறைத் தூக்கத்தில் இருந்த அலிகள் சுறுசுறுப்படைந்தார்கள்.

பூஜியானாவின் பள்ளியறைக் கதவருகே வந்ததும் அந்தக் கதவைக் கையாலே தொட்டதும், நெற்றியாலே தட்டினார்.

'கண்ணே!' என்று அழைக்கவில்லை; கண்ணீரால் அழைத்தார்.

கண் மூடாத அந்தக் காதல் பறவையோ 'இன்னும் என்ன துயரச் செய்தி' என்று ஏங்கியவாறே கதவைத் திறந்தது.

அவரை அவள் பார்த்தாள்; அவளை அவர் பார்த்தார்.

தேவன் வகுத்த விதி இருவரையும் பார்த்தது.

நாதத்தில் கீதமாய், கீதத்தில் நாதமாய், லயமும் கதியுமாகக் கலந்து விட்ட அவர்கள், யாழ் ஒரு பக்கமும் விரல் ஒரு பக்கமும் நிற்பது போல் சிறிது நேரம் நின்றார்கள்.

அவள் தலைகுனிந்தபடி உள்ளே சென்றாள்; அவரும் கைகளைக் கட்டியபடி பின்னால் சென்றார்.

படுக்கையறை விளக்கை அவள் கொஞ்சம் தூண்டி விட்டாள்; அந்த அறை பிரகாசமடைந்தது.

ஆனால் அந்த நெருப்பின் ஜ்வாலை அவள் உள்ளத்திலிருந்து வருவதுபோல் அவருக்குத் தோன்றிற்று.

இத்தனைக்கும் குறத்தி அவளிடத்தில் சொன்ன சேதி அவருக்குத் தெரியாது; நிமித்திகர் அவரிடம் சொன்ன சேதி அவளுக்குத் தெரியாது.

''தூங்கவில்லையா?'' என்று கேட்டார் சேரமான்.

''நீங்கள்...?'' என்று கேட்டாள் அவள்.

''இறைவன், நிரந்தரமாகத் தூங்கும் நேரம் எதுவென்று எனக்குத் தெரிவிக்கும் வரையிலே இனி எனக்குத் தூக்கமில்லை'' என்றார்.

அவள் மௌனமாக இருந்தாள்.

''சேரக் கூடாது; சேர்ந்தால் பிரியக் கூடாது! என்று கேரளத்தில் ஒரு நாடோடிப் பாடல் உண்டு'' என்றார் சேரமான்.

அப்போதும் அவர் பேசவில்லை.

''ஒன்று செய்யலாமா பூஜியானா?'' என்று திடீரென்று கேட்டார்.

அவள் தன்னையறியாமல் மௌனத்தைக் கலைத்து, ''என்ன?'' என்றாள்.

''நாம் இருவரும் இப்போதே இறந்துபோய் விடலாமா?'' என்று கேட்டார் அவர்.

''பிரபு!'' என்று கதறி விட்டாள் அவள்.

ஒரு மணிமகுடத்துக்காகச் சகல சாகசங்களையும் புரிந்த ஒரு மன்னன், ஒரு காதலிக்காக, அதுவும் பட்டத்து ராணி என்ற அந்தஸ்தைப் பெற முடியாத ஆசை நாயகிக்காகச் சாவைப் பற்றிச்



சிந்திக்கிறான்! அது போதாதா தன் மீது அவன் கொண்டுள்ள தாளாத காதலுக்கு அடையாளம்?

அவன் மார்பிலே முகம் புதைத்து மழலைபோல் அழுதாள் பூஜியாளு.

சேரமான் நினைத்தார், ''நிமித்திகர் சொன்ன சேதி அவளுக்குத் தெரிந்து இருக்க வேண்டும்'' என்று.

பூஜியாளு நினைத்தாள், ''குறத்தி சொன்ன சேதி அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும்'' என்று.

அழுதவளை அணைத்து, ஆரத் தழுவி உச்சி முகர்ந்து, இரு கைகளால் அவள் கன்னத்தைத் தொட்டு, அவள் முகத்தை நிமிர்த்தி, ஒரு கணம் பார்த்த சேரமான், தாம் அவள் மார்பில் சாய்ந்து கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினார்.

ஆறாத துயருக்கு அழுகைதானே பரிகாரம்!

அவள், அவர் தலையைக் கோதிக் கொடுத்தாள்.

சில விநாடிகளில் அவள் கரத்தை அப்புறப்படுத்திய சேரமான், பனிச்சென்று உட்புற அறைக்குள் சென்றார். அது உணவருந்தும் அறை.

உள்ளே சென்று அவர் கதவைத் தாழிட்டுக் கொண்டார்.

''பிரபு! பிரபு!'' என்று கதவைத் தட்டினாள் பூஜியாளு.

கதவு திறக்கப்படவில்லை.

தட்டினாள்; கதறினாள்; தட்டினாள்.

ஆட்களை அழைக்கலாமா என்ற அளவுக்கு பூஜியாளுவின் பயம் அதிகரித்தது.

திடீரென்று கதவு திறக்கப்பட்டது.

இரண்டு கண்ணாடிக் கோப்பைகளைக் கையில் ஏந்தியவாறு சேரமான் காட்சியளித்தார்.

அந்த இரண்டு கோப்பைகளிலும் இளநீர் ஊற்றப்பட்டு, வழுக்கைகள் மிதந்து கொண்டிருந்தன.

அவர் படுக்கையறைக்குள் நுழைந்தார். பஞ்சணையில் அமர்ந்தார். அவளையும் அமரச் சொன்னார்.

கோப்பைகளைப் பார்த்து, ''என்ன இது? என்ன இது?'' என்றாள் பூஜியாளு.

''ஒன்றுமில்லை; இளநீர்!'' என்று சொன்னபடியே, ஒரு கோப்பையை அவள் கையில் கொடுத்தார்.

பூஜியாளு அதைக் கூர்ந்து கவனித்தாள். உள்ளே, அடித்தளத்தில், வைரத் தூள்கள் கிடந்தன.

தன் கோப்பையைக் கையில் வைத்தபடியே, அவரது கோப்பையைப் பனிச்சென்று பிடுங்கித் தூக்கியெறிந்தாள் பூஜியாளு.

''சேர நாட்டின் மகா வம்சத்தைக் காக்க வேண்டியவரும், எதிர்காலத்தில் மும்முடிச் சக்கரவர்த்தியாக விளங்க வேண்டியவருமான என் நாயகன் இந்த ஏழை பூஜியாளுவுக்காகச் சாகக் கூடாது. பறவைகள் வரலாம் போகலாம்; மகா விருக்ஷம் சாய்ந்து விடக் கூடாது. எந்



தக் குழந்தையினலே இந்த வம்சத்துக்கு அழிவு வருமோ, அந்தக் குழந்தை இந்த மண்ணிலே பிறக்க வேண்டாம். என் பிரபு! பெருமானே! என்னைக் கப்ப லேற்றி அனுப்பி விடுங்கள். இஸ்ரவே லில் ஒரு ஜீவன் உங்களுக்காக வாழ்ந்து கொண்டிருக்கிறது என்ற நினைவே உங்க ளுக்கொரு நிம்மதியை அளிக்கும். 'வீர கேரளத்தில் ஒரு தேவன் நமக்காக வாழ்ந்து கொண்டிருக்கிருன்' என்ற நினைவு எனக்கும் நிம்மதியை அளிக்கும். எங்கள் நம்பிக்கைப்படி என் வயிற்றில் பிறக்கப் போகும் செல்வமே புதிய ஒரு மார்க்கத்தின் கர்த்தாவாக ஆனலும் ஆகலாம். அவன் இங்கே பிறந்தால் தானே ஆபத்து? சொல்லுங்கள். நான் உயிரோடு உங்களைப் பிரிவதைப் பொறுத்துக் கொள்ளுங்கள்; இல்லையேல் என் உயிர் பிரிவதைச் சகித்துக் கொள் ளுங்கள்!'' என்று கூறியபடியே எழுந்து இளநீர்க் கோப்பையை வானத்தை நோக்கி நீட்டினுள் யூஜியாஹு.

''அம்மா!'' என்று அலறினர் சேர மான்.

தாயை அழைக்கும் வார்த்தையால் அவர் அவளை எப்போதும் அழைத்த தில்லை.

''நான் இஸ்ரவேலுக்குச் சென்ற பிற்பாடு இங்கே வருகின்ற ஒவ்வொரு வாணிபக் கப்பலிலும் என் கண்ணீரை அனுப்புவேன். அவை திரும்பி வரும் போது உங்கள் புன்னகையை அனுப் புங்கள். தெளிந்த இதயத்தோடும், திட சித்தத்தோடும் இதை நான் கூறு கிறேன். எங்கே என் கண்ணீரை ஒரு முறை பாருங்கள்'' என்ருள், யூஜியாஹு.

சேரமான் அவள் முகத்தை நிமிர்த்திப் பார்த்தார்.

பழங்காலக் குகை ஓவியங்களைப் போல் அவள் கன்னத்தில் விழுந்த கோடுகள் காட்சியளித்தன.

''எங்கே உங்கள் புன்னகையை ஒருமுறை காட்டுங்கள்'' என்ருள் அவள்.

மலரைப் பார்த்து இலையும் சிரிக்க முயல்வதைப் போல், சேரமான் சிரித் தார்.

இருவரும் கடைசியாகச் சில முத் தங்களைப் பரிமாறிக் கொண்டார்கள்.

கோழி கூவத் தொடங்கிற்று.

இப்போது, தூக்குமேடையில் இருந்து வரும் ஒலிபோல் அது அவர்களுக்குக் கேட்டது. (தொடரும்)





''ஊருக்குப் போய்ச் சேர்ந்ததும் என் ஆபீஸ் அட்ரசுக்குக் கார்டிலே எழுதாதே!''

''ஏன் அத்தான்?''

''எல்லோரும் படித்தபின் கசங்கிய கார்டிலே உன் எழுத்தைப் படிக்க முடிவ தில்லே.''

''ஊரிலிருந்து உங்க அப்பாவையும் உன் மாமாவையும் வரச் சொல்லித் தந்தி அடி பத்மா!''

''ஏது திடீரென அத்தனை கரிசனம்?''

''ஒவ்வொரு ஆசிரியரும் ரு. க வுக்கு இரண்டு பேரை அழைத்து வரணுமாம்.''



''அம்மா தாயே! இந்த ராப்பிச்சைக் காரனுக்கு நீங்க சாப்பாடுகூடப் போட வேண்டாம்! டி. வி. பார்க்க அனுமதிச்சா போதும், தாயே!......''



''என்னுடன் நடித்த ஹீரோக்களிடம் இல்லாத இரண்டு தனிச் சிறப்புக்களை உங்க ளிடம் காண்கிறேன்.''

''என்ன அது?''

''டோப்பாவும் இல்லே; தொந்தியும் இல்லே!''

# எனக்குத் தெரியுமே நம்பகமானது க்ளைகோடின்—

**இருமல் தொல்லை இவளை விரைவில் விட்டகல...**






## இந்தியாவின் வேறெந்த இருமல் மருந்தையும் விட அதிக அளவிலே இருமலை நிறுத்தியுள்ளது க்ளைகோடின்.

## எனவேதான் அது முதல்தரமானது

இருமல் பாதித்த எல்லா உறுப்புகளிலும் அது விரைந்து செயல்பட்டுத் தவறுமல் துரிதமான ஆறுதல் அளிக்கிறது.

- தொண்டைக் கமறலுக்கு இதமளிக்கிறது.
- ஜலதோஷத்தோடு வரும் இருமலை விலக்கிச் சளியடைப்பைத் தளர்த்துகிறது.
- நிம்மதியான உறக்கத்தைத் தூண்டி, மார்புத் தசைகளை இளைப்பாற்றி மூச்சு விடுதலை எளிதாக்குகிறது

எவ்வித இருமலையும் முழுதும் கட்டுப்படுத்த உறுதுணை க்ளைகோடின்.




க்ளைகோடின்—இந்தியாவில், இருமலை முறியடிக்கும் சேம்பியன்—
நம்பகமான மருந்துகளை நமக்குத் தரும் அலெம்பிக் நிறுவனத்திடமிருந்து.

everest/519/ACW-tm

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடேட்

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய- 400 022
டெலிபோன்: 471455
தந்தி: "GROWRICH" தபால் பெட்டி 6759

---

**ஏலம் கேட்டபிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட**

**1976 நவம்பர், புதிய குரூப்புகள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | மாதங்கள் | ஏலத் தேதி |
|---|---|---|---|---|
| STB | ரூ. 100/- | ரூ. 2500/- | 25 மாதங்கள் | 14-11-76 |
| STC | ரூ. 50/- | ரூ. 1250/- | 25 மாதங்கள் | 14-11-76 |
| STF | ரூ. 25/- | ரூ. 625/- | 25 மாதங்கள் | 14-11-76 |
| LTM | ரூ. 50/- | ரூ. 2000/- | 40 மாதங்கள் | 14-11-76 |
| LTG | ரூ. 125/- | ரூ. 5000/- | 40 மாதங்கள் | 21-11-76 |
| LTF | ரூ. 250/- | ரூ. 10000/- | 40 மாதங்கள் | 28-11-76 |
| LTE | ரூ. 500/- | ரூ. 20000/- | 40 மாதங்கள் | 28-11-76 |

தலைமை ஆபீஸ் & ரிஜிஸ்டர்டு ஆபீஸ்:
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005
கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புது டில்லி & கோயமுத்தூர்

இலவசப் பிரகடனத்திற்கு எழுதுங்கள்
**சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது**

வேலை செய்யும் நேரங்கள்:
காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை

**வார விடுமுறை: திங்கட்கிழமை**

ஸ்தாபிதம்: 1947

30 YEARS

எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

# அக்கா

கே. ஆர். விஜயாவுக்குத் தகுந்த பாத்திரம் கிடைத்திருக்கிறது. கச்சேரியில் பாடும் போதுதான் முகத்தில் எத்தனை அமைதி! எதிர்பாராத நிலையில், கமலாவை ஒருவன் காதலித்ததும் அவள் அடைந்த பரவசத்தை விஜயா நன்கு பிரதிபலிக்கிறார். இறுதியில், கட்டிய கணவன் நிர்ப்பந்தமான சூழ்நிலையில், நஞ்சைக் கொடுத்தபோது குளிர்ந்த நெஞ்சுடன் அதை ஏற்றுக் கொண்ட கமலாவின் முடிவை விஜயா அதியற்புதமாகத் திரையில் நடித்துக் காட்டி விட்டார். அவருக்கு ஒரு சபாஷ்!

கமலாவின் தங்கை ராதாவாக நடிக்கும் அறிமுக நடிகை விஜயபாலா அநுபவ நடிகையைப்போல் சோகமாகவும் சுறுசுறுப்பாகவும் நடிக்கிறார். அவருக்கு ஒரு பலே!

கடத்தல்காரனாகவும், கமலாவின் கணவனாகவும் ஜெய்கணேஷ் மிக நன்றாக நடிக்கிறார் என்றாலும் சற்று மிகையான நடிப்பு காணப்படுகிறது. கொஞ்சம் கட்டுப்பாடு வேண்டும். மற்றப்படி பரவாயில்லை. அவருக்கு ஒரு 'பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!'

கருணிராஜன், மனோரமா நடிக்கும் காமெடிக் காட்சிகள் நிஜமாகவே சிரிக்க வைக்கின்றன. அவர்களுக்கு ஒரு 'கீப் இட் அப்!'

விறுவிறுப்பும், சுவாரசியமும் நிறைந்த கதைக்குச் சிறந்த ஒளிப்பதிவு அமையாதது மிகவும் வருந்தத்தக்கது. — 'வாட் எ பிட்டி!'

பாடகி கமலாவின் வீணையில் வைரத்தை மறைத்து வைத்துத் திரைக் கதையில் 'த்ரில்' ஏற்படுத்துகிறார்கள். கமலாவின் தங்கை ராதாவிடம் இருந்த கிருஷ்ணன் பொம்மைக்குள் கடத்தல் வைரம்! அது படம் முழுதும் 'சஸ்பென்ஸாக'த் தொடர்ந்து வந்து கடைசியில் குட்டு வெளிப்படுகிறது. — 'ஹாரர்ரே!'

ஓர் எழுத்தாளன் எழுதிய நாவலின் பாத்திரங்கள் நிஜ வாழ்க்கையில் பலரையும் பிரதிபலிக்கவே அவர்கள் அந்த நாவலாசிரியனிடம் வந்து சண்டை போடுகின்றனர். அவர்கள் போடும் சண்டையே திரைக் கதையாகிறது. இந்த உத்தி மிகவும் புதுமையானது; அதன் காரணமாக நல்ல 'சஸ்பென்ஸ்' (கொஞ்சம் கூடப் பொத்தல் இல்லாமல்) உருவாகிறது. — 'சீர்ஸ்!'

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகியவற்றின் முழுப் பொறுப்பையும் ஏற்றிருப்பவர் மதுரை திருமாறன். அவருக்கு ஒரு 'வெல்டன்'!

எழுத்தாளராக வரும் வி. கே. ராமசாமி, வி. எஸ். ராகவன், விஜயகுமார் ஆகியவர்கள் 'சஸ்பென்ஸ்' நிறைந்த திரைக் கதையை ஒழுங்காக முடித்து வைக்கிறார்கள். பேஷ்!

வெகு நாட்களுக்குப் பிறகு பாராட்டும்படியான ஒரு நல்ல படம் வந்திருக்கிறது. பார்த்து மகிழ்வதை விட்டு விட்டுத் தலைப்பு கவர்ச்சிகரமாய் இல்லையே என்று ரசிகர்கள் குறைகூறிக் கொண்டிருக்கலாமா? அவர்களுக்கு ஒரு 'குட்லக்!'

— காந்தன்






போலீஸ் அதிகாரியின் பிள்ளை என்று எண்ணியோ என்னமோ என் மகன் ஜீவனை மட்டும் விசாரிக்காமல் விட்டு விட்டார்கள். அவனுடைய ஆருயிர் நண்பர்கள் பேபியையும், சின்னுவையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று குடைந்திருக்கிறார்கள்.

அந்தப் பெண் சொன்ன அடையாளங்களை வைத்துப் பார்த்தால் ஜீவனையும் சந்தேகிக்க வேண்டியதுதான். ஹிப்பியாட்டம் கிராப், டங்கரி என்று மட்டும்தான் குழம்பிப் போன அவளால் குறிப்பிட முடிந்தது. நல்ல வேளை! காரியம் மிஞ்சுவதற்குள் எப்படியோ தன்னைக் காப்பாற்றிக் கொண்டுவிட்டாள். வயதில் பெரியவளல்லவா?

ஜீவன் குற்றவாளியா? யாருக்குத் தெரியும்? அவன் 'ஷேவிங் ஸெட்' வாங்கி ஒரு வாரம்தான் ஆகிறது. இன்னும் சரி வர இழுக்கக்கூடக் கை பழகவில்லை. பார்வைக்குப் பச்சிளம் குழந்தை. ஆனால் எத்தனை பயங்கர 'காமிக்ஸ்' படிக்கிறான்? எத்தனை 'அடல்ட்ஸ் ஒன்லி' படங்களை இரகசியமாகப் பார்க்கிறான்? அவன் 'ஷெல்பி'ல் டெட் மார்க் புத்தகங்கள் இருந்ததாகக்கூட நினைவு.

மூவரில் ஒருவர்தான் குற்றவாளி. ஆனால் யார்?

பேபிக்கு ஏறக்குறைய ஜீவனுடைய வயதுதான். ஆனால் கூடுதல் வளர்த்தி. வசதியான வாழ்வுதான் காரணம். முகத்தைப் பார்த்தால் அவனும் 'பச்சா'தான். 'பீடிங் பாட்டில்' விளம்பரத்துக்குப் பயன்படுத்தலாம்! சின்னு நல்ல கறுப்பு. ஆகிருதியில் இவர்களை விட மிகப் பெரியவன். முகத்தில் நிறைய கரு கரு தோன்றியிருந்தது. ரெண்டுங்கெட்டான் தோற்றம்.. ஹிப்பி கிராப். ஆனால் அது அவனுக்கு எடுப்பாகவே இராது. வர்ணச் சட்டை. பார்ப்பதற்குக் கோரமாக இருக்கும். ஜீவனுக்கும் பேபிக்கும் பக்கத்தில் அவன் ஒரு திருஷ்டி பரிகாரம்.

ஜீவனைக் கூப்பிட்டனுப்பினேன். சிரித்துக் கொண்டே வந்தான். கையிலே பட்சிகளைச் சுடும் துப்பாக்கி. கழுத்தில் 'கிதார்'.

அப்பா என்று என்னிடம் பயம் பயம் கிடையாது. நான் உறுமுவது அரிது. உதைப்பது 'நில்'. இந்த விஷயத்தில் நான் எங்கப்பாவுக்கு நேர் எதிர். அவர் சுத்த 'டைரண்ட்'. எடுத்ததற்கெல்லாம் பூசைதான். அதனால் தான் எனக்கு இவ்வளவு 'காம்ப்ளெக்ஸ்'. ஜீவனாவது 'நார்மலாக' வளர வேண்டும் என்பதால் நான் அவனிடம் சாடுவதில்லை.

முன்னொருதடவை ஜீவனை இதேபோல் என் அறைக்கு அழைத்திருக்கிறேன், அவன் இரகசியமாகச் சிகரெட் பிடிப்பது தெரிந்தபோது.

''ஜீவன்.''

''என்ன டாடி?''

''எங்கே கிளம்பினே?''

''டிஸ்கோதே'க்கு.''

''உன்னை எதற்குக் கூப்பிட்டு அனுப்பினேன், தெரியுமா?''

முகத்தை ஆராய்ந்தேன். குற்ற உணர்ச்சி ஏதுமில்லை.

''எனக்கு எப்படித் தெரியும்? யாராவது கஞ்சா குடிப்பதாக வத்தி வைத்தார்களா?''

''அதெல்லாம் இல்லை. அந்தப் பெண் விஷயம்.''

''வேறு 'இண்டரஸ்டிங்'காக ஏதாவது கேளேன் டாடி.''

''ஜீவன், உண்மையைச் சொல்லிவிடு. யார் குற்றவாளி? நீதானே?''

''எதற்காக என்னைச் சந்தேகிக்க வேண்டும்?''

''அப்படியென்றால் நீ இல்லையா? பின்னே யார்? பேபியா, சின்னுவா?''

''நண்பர்களைக் காட்டிக் கொடுக்கும் வழக்கம் எனக்குக் கிடையாது.''

''நீ 'இன்னஸெண்ட்' என்று தெரிந்தால் போதும். மற்றவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை.''

''நான் எதுவுமே சொல்லப் போவதில்லை.''

''ஜீவன்.....''

''அதட்டலுக்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். டோண்ட் பி ஏ ஸ்டுப்பிட் ஸ்கொயர் டாடி.''

ஜீவன் போய் விட்டான். பேபியையும் சின்னுவையும் கூப்பிட்டு அனுப்பினேன்.

''பேபி, நீ நல்ல பையன் இல்லையா?''

சின்னு இடைமறித்தான்.

''இவனா? இவனைப் பற்றி உங்களுக்குத் தெரியாது ஸார். பெரிய 'ரோக்'. காலேஜிலே அத்தனை பேருக்கும் இரகசியமாக லாகிரிப் பொருள்கள் தருவது இவன்தான்.''

''நிஜமாகவா பேபி? நீ அவ்வளவு மோசமாகிவிட்டாயா?''

பேபி பதில் சொல்லவில்லை.

''ஆமாம், அந்தப் பெண்ணைப் பலாத்காரம் செய்தது யார்?''

''தெரியாது.''

''உங்கள் மூவரில் ஒருவர்தான். சந்தேக மில்லை. ஆனால் யார் ?''

''சொல்ல முடியாது ஸார்.''

''நீ சொல்லித்தானாக வேண்டும்.''

''மிரட்டாதிங்க ஸார். எங்க பிரின்ஸி பாலைக் கண்டே நான் பயப்படலை. உங்களைக் கண்டு மிரள்வேனா ? தடை செய்யப்பட்ட புத்தகங்களை வகுப்புக்குள் கொண்டு சென் றேன் என்பதற்காக மிரட்டிப் பார்த்தார் மனுஷன். இந்தப் பேபியா பயப்படுவான் ? இது துணிந்த கட்டை ஸார்.''

''நீ எப்படியோ ஒழிந்து போ ! அதைப் பற்றி எனக்கு அக்கறை கிடையாது. ஆனால் என் பிள்ளை ஜீவன் குற்றவாளியா ?''

''பெரியவர்களாட்டம் நாங்கள் ஒருவரை ஒருவர் காட்டிக் கொடுக்க மாட்டோம்.''

'' நீ சொல்லப் போகிறாயா, இல்லையா?''

''நோ ஸார்.... நெவர்.''

'' ஹாங் யுவர் ஸெல்ப் !''

சின்னு பக்கம் திரும்பினேன். அதற்குள் அவனே பேசத் தொடங்கிவிட்டான்:

''என் பெயர் சின்னு. வயது பதினெட்டு. எத்தனையோ வம்புகளில் மாட்டிக் கொண்டு வெற்றிகரமாக வெளிவந்தவன். கடைசி யாகச் செய்த துணிகரமான செயல் அப்பா வின் காரை லைசென்ஸில்லாமல் ஓட்டியது. ஹாபிகள் : 'காஸிபிங்', 'ஸ்மோக்கிங்', 'செக்ஸ்' புத்தகங்கள் படிப்பது. நீங்கள் கேட்கப் போகும் கேள்விக்குப் பதில்: தெரி யாது, தெரியாது, தெரிந்தாலும் சொல்வ தற்கில்லை.''

''ஏன்டா, எல்லாம் சுத்த 'இவன்'களாக இருக்கிறீர்கள் ?''

'' ஜெனரேஷன் காப் ! உங்கப்பாவும் அந்தக் காலத்தில் இப்படித்தான் அழுதார்.''

தாரா வந்தாள். அவளிடமிருந்து ஜீவன் சமாசாரத்தை மறைத்து வைத்திருந் தேன். தெரிந்தால் 'பிய்த்து'விடுவாள். பள்ளிக்கூட 'ஹெட்மிஸ்டிரஸ்' ஆயிற்றே ! 'டிஸிப்ளின்' விஷயத்தில் ஒரே கெடுபிடி.

இப்பொழுது சொல்லித்தானாக வேண்டும். மெதுவாகப் பிரஸ்தாபித்தேன்.

''ஏன் இவ்வளவு நாட்கள் சும்மா இருந் தீர்கள் ? எல்லாம் நீங்க தர்ற அசட்டுச் செல்லம்தான் ! அடித்தால்தான் பிள்ளைகள் திருந்தும். உங்கள் 'மாடர்ன் தியரி'களை எல்லாம் குப்பையில் வீசுங்கள். சிறு வயதில் நீங்கள் எவ்வளவு போக்கிரியாக இருந்தீர்கள்? உங்கப்பா அவ்வப்போது தரப் போய்த்தானே உருப்பட்டீர்கள்? ஜீவன் வரட்டும்.''

பாதி ராத்திரிக்கு மேல் ஜீவன் வந்தான். ''மம்மீ'' என்று நீட்டி முழக்கியபடி உள்ளே சென்றவன் கன்னத்தில் 'பளார்' என்று ஒன்று விழுந்தது. தொடர்ந்து அநேகம்!

ஜீவன் அழும் சத்தம். தொடர்ந்து 'இல்லே மம்மீ.... இனிமே இல்லே மம்மீ....' என்ற விசும்பல்.

விளக்கை அணைத்ததும் தாரா காதருகில் மெதுவாகக் கிசுகிசுத்தாள்.

'' எனக்கு நேற்றே சந்தேகம்தான்.''

'' ஏனாம் ?''

''ஜீவன் முகத்தில் ஒரு கீறல் இருந்தது. புது ஷேவிங் செட் மீது பழியைப் போட்டான் பிள்ளையாண்டான். எனக்கு நம்பிக்கை இல்லை...உம், பாரம்பரியம் எங்கே போகும்?''

நான் விளக்கைப் போட்டு நிலைக்கண்ணாடி யில் என் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கீறலின் வடு இன்னும் இருந்தது! முப்பது வருஷங்களுக்குமுன் நான் தாராவிடம் வாலாட்டினபோது கிடைத்த பரிசு. தொடர்ந்து, எங் கப்பா எனக்கு அளித்த 'பளார்', 'பளார்' செவிகளில் ஒலித்தது.



# சிலம்புச் செல்வம்!



**ம.பொ.சி**

கண்ணகியும் கோவலனும் ஒரு நாள் விடியற்கால நேரத்திலே புகார் நகரை விட்டுப் பிரிந்து மதுரை நோக்கிப் பயணமாயினர். இதனை, ''பாத யாத்திரை'' என்று சொல்லலாம். ஆனால் இதை விடவும் புனிதமானது கண்ணகியும் கோவலனும் மேற்கொண்ட யாத்திரை! அதனால், அதனை ''மான யாத்திரை'' எனலாம். இந்த யாத்திரையை நாடு காண் காதை, காடுகாண் காதை, வேட்டுவ வரி, புறஞ்சேரியிறுத்த காதை, ஊர்காண் காதை ஆகிய காதைகளிலே விவரிக்கிறார் அடிகள். நாடுகாண் காதையிலே சோழ நாட்டின் வளம் முழுவதையும் வருணிக்கின்றார்.

'' வயலூம் சோலையும்
 அல்லது யாங்கணும்
அயல்படக் கிடந்த
 நெறியாங்கு இல்லை ''

என்ற வரிகளிலே, சோழ நாட்டிலே பார்க்குமிடந்தோறும் பச்சைப் பசேலென்ற வயல்களும், இருபுறமும் சோலைகளைக் கொண்ட சாலைகளும் தவிர வெற்று நிலமே இல்லை என்கிறார். இன்றும் சோழ நாட்டின் பிரதான பகுதியான தஞ்சை மாவட்டம் வயலும் சோலையுமாகத் தானே நம் கண்களுக்குக் காட்சி அளிக்கின்றது.

வேட்டுவ வரியிலே காட்டுப் பிரதேச மக்களின் வாழ்க்கை முறையைக் காட்டுகின்றார். அவர்கள் — ஆண்களும் பெண்களுமாக ஒருங்குகூடி கொற்றவைத் தெய்வத்தை வழிபடும் காட்சியைப் படிப்போரின் அகக்கண்கள் காணும்படி காட்டுகின்றார்.

சோழ காண்டத்தை நாடு காண் காதையோடு முடித்த கவிஞர், மதுரைக் காண்டத்தைக் காடு காண் காதையிலே தொடங்குகிறார். இதனால், பாண்டி நாட்டில் அந்நாளிலும் காட்டுப் பிரதேசமே மிகுந்திருந்தது என்பதனை அறிகிறோம்.

வேட்டுவ வரியிலே குறவர் மக்களால் கொண்டாடப்படும் தெய்வமேறிய சாலினி என்பாளைக் கொண்டு, கண்ணகியாள் உலகோர் தொழும் பத்தினித் தெய்வம் ஆகப் போவதனை முன்கூட்டி கவிஞர் அறிவிக்கின்றார்.

'' இவளோ, கொங்கச் செல்வி
 குடமலை யாட்டி ;
தென் தமிழ்ப் பாவை
 செய்த தவக் கொழுந்து ;
ஒரு மாமணியாய்
 உலகிற்கு ஓங்கிய
திருமா மணி ''

என்பது தெய்வமேறிய சாலினி வாக்கு.

கோவலனுடைய ஊழ்வினையானது யாழின் மூலம் அவனும் மாதவியும் பாடிய கானல் வரிப் பாடலை ஒரு காரணமாகக் கொண்டு மாதவியிடமிருந்து அவனைப் பிரித்துவிட்டது. இதனை உணர்த்தவே, ''யாழிசை மேல் வைத்துத் தன் ஊழ்வினை வந்து உறுத்தது'' என்கிறார் கவிஞர். இது முதல் திருப்பம்.

ஊழ்வினையால் மாதவியை விட்டுப் பிரிந்த கோவலன் கண்ணகியிடம் வந்து சேர்ந்தான்.

கண்ணகியைக் கைப்பிடித்துப் புகாரை விட்டுக் கோவலன் புறப்பட்டது கதையில் இரண்டாவது திருப்பமாகும். இதற்கும் வினையையே காரணமாக்குகிறார், ''வினை கடைக்கூட்ட வியங் கொண்டான்'' என்னும் சொல்லால். கோவலன் தன்மானம் உடையவன். அதனால்தான், தன் பத்தினியோடு நாடுவிட்டுப் பெயர்வதனை ஊரிலுள்ளோர் கண்டுவிடாதபடி, காலைக் கதிரவன் அடிவானத்தில் எழுவதற்குமுன் உள்ள இருள் சூழ்ந்த விடியற்கால நேரத்திலே புறப்பட்டான்.

கண்ணகியாளின் சிலம்பை விற்றுப் பொருள் தேடுவதுதான் கோவலனின் குறிக்கோள். ஆனால், அதனை, தான் பிறந்த ஊரிலேயே செய்வதற்கு அவன் மனம் நாணியது. அதனால், வேற்று நாடான மதுரைக்குச் சென்று அங்கே சிலம்பை விற்றுப் பொருளீட்ட விரும்பினான். இப்படிப்பட்டவனைத் தன்மானத் தமிழன் என்று சொல்லாமல், வேறு யாரைச் சொல்வது ?

புகார் நகரை விட்டு ஒரு காத தூரம் கடந்து சென்றதும், ''மதுரை மூதூர் யாது?'' என்று கோவலனைக் கேட்கின்றாள் கண்ணகி. வழிநடைத் துன்பத்தை ஒரு காத தூரம் நடந்ததற்குள்ளேயே உணர்ந்துவிட்டாள். கண்ணகியின் மன நிலையைக் கோவலன் அறிந்து கொண்டான். ''இன்னும் முப்பது காத தூரம் இருக்கிறது'' என்று பதில் சொல்ல வேண்டியவன் அவள் அஞ்சுவாளே என்று,

'' ஆறு ஐங் காதம் நம்
 அகல் நாட்டு உம்பர் ''

என்று கூறுகின்றான். ஆறும் ஐந்தும் சேர்ந்து பதினொரு காத தூரத்தில் மதுரை இருக்கிறது என்று கண்ணகி நம்பும்படியாகக் கூறுகின்றான்.

புகார் நகரை விட்டு ஒரு காதம் சென்றதும் வழியில் ''கவுந்தி'' என்னும் சமணப் பெண் துறவியைக் காண்கின்றனர். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

# வாரீர் —
# புதுமை
# தவழ்ந்திட

**எலுமிச்சைப்
புத்துணர்வுப்
பரவசத்தோடு**

லிரில் புத்துணர்வு.
பார்த்தறியாப் புதுமை,
பரவசக் கிளுகிளுப்பு.
லிரில்.
அலையெறியும் தளதள
பச்சை. அதன் நயமோ
குளுகுளு எலுமிச்சை.
பொங்கிப் பீறிடும்
நுரைவளம்.









## லிரில்
**புத்துணர்வு சோப்**

**கிளுகிளு புத்துணர்வில் குளித்தெழ**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்புக்கள்.

லின்டாஸ்-LR.21-140TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு

கடற்காற்றின் மென்மையையும் பழிக்கும் புடவைகள்...ஒரு பெண் மணி தன் பெண்மைக்கு இணை யாக இதைவிட வேறு எதைத்தான் உடுத்த விரும்புவாள்! இந்தப் புடவைகளை உடுத்தி நான் வெளியே செல்லும் ஒவ்வொரு தடவையும், இளங்காற்றில் மிதந்து செல்லும் உணர்ச்சி உண்டாகிறது.

வாரத்தில் கிழமைக்கு ஒவ்வொன் றாக வெவ்வேறு மபத்லால் புடவைகள் வைத்திருக்கிறேன்.

உங்களுக்கு நன்றி!

மபத்லால்

